# கிறிஸ்து மான்மியம்.

இஃது

சங். ஸ்தொஷ் ஐயர்

முயற்சியால் இயற்றப்பட்டது.

Tranquebar,

PRINTED BY E. MAENNIG, AT THE EVANG. LUTH. MISSION PRESS.

1891.

# காபிரியேல் தூதன் கன்னிமரியாளிடம் வந்த சருக்கம்.

க

இப்புவியிற்காகிய தனதானியமிவைமுன்னாச்
செப்பிடு மேல்வீடுகள் சுகமேசெய்திடுபாண்டக்
குப்பல்களுணுடையணிகளினாலொரு குறைவில்லா
வைப்பெனவே செப்பிடு கலிலேய வளநாடு

உ

மேவியநசரேத் தெனுநகரதனின் மிகுசெல்வத்
தாவிதுமன்னன் சந்ததிவந்தோன் மன்னுள்ள
மாவியேயா மெய்த்தேவற்கிடமாகச் செய்தோ
னேவலினற்குண பூடணனுளன் யோசேப்பென்போன்

௩

மணவினை முடியாதையவனுதவின் மரபோர்க்குட்
கணவனிவன் கன்னிகையிவளென்றே கலியாணம்
பணுவதன்முன்னியமித்திடுவதுபோற் பந்துக்க
ளெண்ணியிவனுக்கோர் கன்னிகையை நியமித்திட்டார்

௪

அந்தக்கன்னிகையின் பேரோ மரியாளாகுஞ்
சிந்தைப்பரம பிதாவையலா தெதுவுஞ்சேராள்
சொந்தச் செயனற்கிரியைகளுடையாள் சுகுணத்தா
ளிந்தக் கன்னிகைமார் குலதீபமென்பாள்பால்

௫

பரலோகாதிபனாகிய பரம பிதாவாலே.
வரவிடவே காபிரியே லென்றொரு வான்றூத
னொருவருமறியா தவளுறையும் வீட்டுட் சென்றே
கிருபையை வாழப் பெற்றவளே யென்றான் கேட்பான்

௬

உன்னொடிருக்கின்றா ருயர்கர்த்தர் பெண்பாற்குண்
மன்னு நீயாசீ செய்யப்பட்டிடுமாதென்றா
னன்னவளவனைக் கண்டவனுரையா லேயஞ்சி
யென்ன படித்தேயிவ்வுபசார மெனவோர்வாள்

௭

அத்தருணத்தவன் மரியாளே நீ யஞ்சாதே
கர்த்தர் கிருபை பெற்றாயிதோ நீ கர்ப்பங்கொண்டோர்
புத்திரனைப் பெற்றேசுவெனப் பேர் புகல்வாயவ்
வுத்தமராயவருன்னதமானவரோர்சேயே

௮

என்னப்படுவார்பரம பிதாவேயேசுப்பே
ரன்னவருக்குத் தாவிதிராசாசன மீவார்
மன்னவராயவர் யாகோபின் குலவழியாள் வார்
முன்னவராசாங்கத்துக்கோர் முடிவிலை யென்றான்

வேறு.

௯

செப்பிடக்கேட்டலுஞ் சிறந்தகன்னிகை
யெப்படியாகு மீதெண்ணத்துள்ளுநமாண்
சொப்பனமாயினுந் தோன்றத்தோய்ந்திலே
னொப்புக்கொளுந்தகைத் தொன்றுமில்லென்றாள்

௰

பரிசுத்தவாவியுன்பாலில் வந்திடும்
மருவியுன்னதரது வலமுன்மேனிழல்
பெருகவே செய்யுமாதலினின்கண்பிறந்
தருமையாய்வருஞ் சுத்தமுள்ளதானது

௰௧

தேவன் குமாரனென்றே செப்பப்படு
மாவதற்கதிகுறியாகவே யிதோ
மேவுநின் னுறவினண் மிகுவயதினாற்
றாவிய வெலிசபேத்தென்படானுமே

௰௨

ஒரு மகவைப் பெறக் கருப்பமுற்றனள்
வருமவன் பெயரும் யோவான் பராபர
னருளினாலனைத்துமேயாகுமென்றனன்
மரியம்மை தானுமுண் மகிழ்ந்து கூறுவாள்

௰௩

ஆண்டவர்க்கடிமையா யிருக்கின்றேனிதோ
வேண்டுநுஞ்சொற்படிவிளைவொற்காகுக
வீண்டென்றுதேனுமிவள் விட்டேகினான்
காண்டிடு நியமிப்புக் கணவனாகியே

௰௪

இருக்கும்யோசேப்புக்கு மீதுசொப்பனந்
தெரிக்கவான்றூதனே சென்றுதாவிதின்
வருக்கயோசேப்பிற்குத் தோன்றிநீமனத்
திருக்கில்லாமனை மரியாளைச்சேர்த்துக்கொள்

௰௫

ஐயமேகொள்ளலை யவளிடம்பிறப்
பெய்தது பரிசுத்த மியையுமாவியாற்
செய்யவுண்டாயிருக்கிறதோர் சேயவள்
வையம் வானகம் புகழ்வரப் பெறுவளே

௰௪
பெறவருமவர்க்கு நீ யேசுவென்றுபே
ருறவிடக்கடவையப் பேரினெண்பொரு
ளிறைவர்தஞ் சனங்களை யேற்றுப்பாவங்க
ளறுதி செய்திரட்சிப்பாரென்பதாமென்றான்.

---

## கிறிஸ்து திருவவதாரச் சருக்கம்.

௧
சீரியநாட்டிற் கிரேனியுவெனும்
பேரினனரசியல் பெற்றுவாழுநா
ளூருளார் குடிமதிப்பெழுதவோர்விதி
நேரவே செய்தனனிலக்க முன்னரே

௨
அவ்விதிபோலவே யகுஸ்துராயனா
லெவ்வுலகுங் குடிமதிப்பெழுதிடச்
செவ்வைசேர்கட்டளை செய்தனனப்போ
தொவ்வொருவருந்தந்த மூர்க்குச் செல்லுவார்

௩
தாவிதின்வழிவந் தோன்றன்குடும்பத்தோ
னவனாதலின் யோசேப்பவனுந்தன்னையே
காவலனாய் நியமங்கொள் கன்னிகைத்
தூயசூன்மரியம்மை தொடர்ந்துடன்வர

௪
கலிலேய நாசரேத்தின் கணையிருந்
துலவியூதேய பெத்திலகேமூரெனுந்
தலைமைசேர் தங்களூர்தன்னில்வந்தன
னலமிகக் குடிமதிப்பெழுதி நல்கவே

௫
வந்திருவருமங்கே வசிக்குங்காலையி
லுந்தியேநாளவள் பெறுதற்குற்றதாம்
றங்கையாம்பராபரன் றனதொரேயரு
மைந்தராமிரட்சக மகவைப் பெற்றனள்

௬
யாவர்க்கும்பொதுவிட மெனுமடத்திலுண்
மேவுதற்காந்த கைமிடைதலின்மையாற்
றேவகுமாரரைச் சேலையிற்சுற்றிக்
கோவினங்கட்டுமோர் குறுமிடத்தினில்

௭
வையகமாங்கொட்டிற் கண்வளர்த்தினாள்
வையகந்தனிலுள்ள மனிதர்யாவரும்
வையகங்களினின்றும் வானமெய்திட்
வையகங்கொண்டருண் மகவும்வைகிற்றால்

௮

வேறு

இப்படிக்கிருக்குங்காலை யெண்ணிலாப் பசுக்கண்மேய்த்தே
குப்பலார் மந்தைகாக்குங் கொள்கையாரிடையர்கூடி
யெப்பொழுதும் போலாங்கேயிருந்தனரிவர்கண்முன்பா
யொப்பிலாத் தேவதேவன் றூதன்வந்தொருவனின்றான்

௯

தேவமான்மியமேதம்மைச் சூழ்ந்தொளிசெய்யவன்னோர்
யாவருழ் பெரும்பயத்தை யெய்தினர் தேவதூத
னீவிரஞ்சிடன் மினென்றிடிவிதோ நிலத்தோர் யார்
மேவுபேரின்புங்கட்கு மிகு சுவிசேடமாக

௰

தெரிக்கின்றேனுங்கட்கின்று தேவராங் கிறிஸ்துவென்னு
மிரட்சகர் தாவீதூரிலெய்தியே பிறந்தார் பிள்ளை
யிருப்பிடம் புடவை சுற்றிப் படுக்கவைத்திருக்குங் கொட
லருத்தியாற் காணுருனேயடையாளமுங் கட்கென்றான்

௰௧

அக்கணம் பரம சேனைத்திரளந்தத் தூதனோடும்
பக்கத்திற்காணப்பட்டுப் பாபரன்றனைத் துதித்துத்
தக்கவுன்னதங்கடம் மிற்றங்கிடும் பராபரற்கு
முக்கிய மகிமை பூவிற் சமாதானம் மொய்த்த மாந்தர்

௰௨

பேரிலே யன்புமுண்டாகுகவென்றார்வர்கள் பின்னர்
நேரநின்றவரை விட்டு நீங்கி வானகம் புகுந்தார்
சீரெலாங் கேட்டவாயர் கர்த்தராற் றெரித்தவண்ணை
மோருவோமி தனை யென்றே யொருமித்துப் பெத்தி

௰௩

வம்மினென்றொருத்தருக்குளொருக்கர் வல்விரைவாய
ரிம்மெனுமளவுளோகி மரியம்மையினை யோசேப்பை
செம்மை சேர்கொட்டில் வைகுஞ் சேயையுங் கண்டுவெ
ரம்ம கவைக் குறித்தே யறையத்தாமறிந்த வெல்லாம்

௰௪

பிரசித்தம் பண்ணினார்கள் கேட்டிடும் பேர்கள் யாருப்
வரமுறுமிவ்விசேடங்கட்கதிசயித்தார் வந்தார்
மரியம்மை யிந்த வார்த்தைகளை யெலாமனத்துட்கொ
யொருவரோடுரையாளுள்ளமொன்றிற்கேயுரைத்திரு

௰௫

மேய்ப்பர் தாம் வானதூதன் சொற்றதுஞ் சொற்றபெ
போய்ப்பலனைக் கண்ட புதுமையுமுன்னியன்பிற்
றோய்த்திடுமனத்தாற்றேவ தேவனைத் துதித்துக்கொ
[illegible]க்களாணக்கத்தோடும் வழிபட்டுத் திரும்பினாரே

௰௬

சூடிமகிழ்ப்பெழுகவந்த காலமுங் குழவியாகிப்
படியினிற்பிறக்கவந்த காலமும் பட்டவாற்றுற்
றுடர்புவியோர்க்குத் தாவீதின் குலத்தோன்றலென்றே
நெங்கணக்காலுந் தேவ தேவனிச்சயித்ததாமால்.

---

## விருத்தசேதனச் சருக்கம்.

க

நாசரேத்தினைவிட்டுத் தாவீதினன்னகரி
லாசையாற்பெற்ற சேய்க்குச் சன்னத்தமார்ந்திடுவா
னே சங்கூறுமெட்டாவது நாணிறைவினிலே
யேசுவென்றுபேரிட்டுந் தாயழைத்தனரீன்றோர்

உ

மரியாம்மையின் வயிற்றிற்கருப்பம் படவருமு
னொருவனாமேவதூதனானுரைத்த பேரிதுவாம்
பெரியதாமிந்தப் பெயரின காரணம் பவமகற்றித்
தரணியோர்களை யிரட்சிப் போரெனும் பொருட்டுமால்

௩

சுத்தமே செய்துகொண்டிடத்தோன்றிடு நாலு
பத்துநாளவர்களுக்குத்தாணிறைபட்ட போது
காத்தர் தந்தியாமபிரமாணக்கட்டளைபோ
லித்தரைப் படிமாணெலாமபரிசுத்தமெய்த

௪

நிறுக்தல் போலவே கத்தா முன்பா நிறுத்திடவும்
பொழுத்த கான்புறாச் சோடியோ டல்லது புனிற்றாய்ச்
சிறுத்தகுஞ்சிரண்டுகளையே பலிசெலுத்திடவும
மறுப்படாவியேசுவை யெருசலேங் கொடுவந்தார்

௫

வங்க காலையினீகியுந் தெய்வவாணன்பும்
முங்கவுள்ளவனிசிரவேலர்கண் முன்னுறுதலாய்ச்
சிந்தை செய்யாச் சாதகிருப்பவன சிமெயோனென்பா
னந்தமாந்தன் சுத்தாவியானவர்க்கிடமானோன்

௬

சுத்தவாவியாற் கர்த்தர் தங்கிறிஸ்து தோன்றலைக்கண்
ணைத்திடன் முன்னே மரணத்தைக்கண்வையாய் நீ யென்
றுத்தரமுண்டாயிடப்பெற்றோயுற்றனனாவி
யித்தேவாலயத்தேகிடச் செய்பவேகினனால்

௭

சிமெயோன் வருமளவிலியேசுவாஞ் சேயைத்
தாமெடுத்துத் தாய் தந்தையர் கோயிலுட் சாரப்
போமிடத்திலச் சிமெயோன் போயவ்வியேசு
நாமமைந்தரைத் தன் கையினெண்ணவேந்தினனே

௮

ஏந்தியே பராபரனையேத்துரை செய்தாண்டவரே
மாந்தனுமடியேனை நும்வார்த்தையின்படியே
சாந்தமார் சமாதானத்தானடத்திடுகின்றீர்
தேர்ந்ததென்னெனிற் புறத்துச்சாதிகளுக்குத்தெளிவும்

௯

உஞ்சனங்களாமிசிரவேற் சாதியார்க்குயர்வும்
விஞ்சுறச்செயும் வெளிச்சமாத் தேவரீர்மிகுந்த
மஞ்சராஞ் சனங்களுக்கெதிர் வருவித்தவுமது
தஞ்சமாரிரட்சிப்பென்கண்டான்கண்டதென்றான்

௰

இப்படிக்கியேசுவின் மகிமையை யவனெடுத்துச்
செப்பக்கேட்ட யோசேப்புந் தன் சேயெனப் பெற்று
வப்படைந்திடு மரியம்மை தானுமுண் மகிழ்ந்தா
ரப்போதன் னவனவர்களை யாசி செய்த வட்கூய்

௰௧

அளவிலா விருதயங்களுள்ளார்ந்திடு மெண்ணம்
வெளிவரும்படிக்கிசிரவேலனேகர் வீழ்தலுக்கும்
வளமையோடெழுதலுக்குமே யெதிருரைவழங்க
ளவொரோயடையாளமா வைக்கப்பட்டுற்றார்.

௰௨

இவரென்றேயுன்னுத்துமத்தை யோர் பட்டயமெய்திக்
கவர்தல் செய்துபோமென்றனனின்றிடுங்காலை
யவிடந் தன்னிலா சேரு கோத்திரப்பானுவேலி
னுவல் குமாரத்தி நுண்ணறிவாள் பெயரன்னாள்

௰௩

அன்னடீர்க்கதரிசியாயிருந்தனளவண்முன்
கன்னிகாப்பெண்ணாயிருந்துப் பின் கணவனோடேழு
வென்னுமாண்டுவாழ்ந்தெண்பத்து நால் வயதுள்ளா
டின்னலோர் பொழுதாற் செபங்களாற் றினந்தினமும்

௰௪

இரவு மெல்லுமாராதனையியற்றுவாள்கோயி
லொருவுறுதிருப்பவளந்தத்தருணம் வந்துற்றே
மருவி நின்றந்தச் சீமெயோன் வார்த்தைகட்கிசைவா
பெருமையார் கர்த்தரைப் புகழ்ந்தெருசலேம் பேரூ

௰௫

கேட்டைச் செய்திடும் பாவத்தினின்றுமே கிளப்பி
மீட்டிடத்தினந்தங்களைக் காத்து மேவுவர்கள்
வேட்டிடும்படியேயியேசுவின் புகழ் விளம்பி
நாட்டத்தாலியேசுவினிடம் விருந்து நன்குண்டாள

௰௬

தாயுந் தந்தையுங் கர்த்தர் கட்டளைப்படிச் சார்ந்து
கோயிலிற் செயுமனைத்தையுமுடித்தபின் கொணர்ந்த
சேயை யேந்தியாலயனின்று மூரிற்குச் செல்லப்
போயினர் பராபரன் புகழ் பிள்ளைபோல் வளரும்

---

## சாஸ்திரிகள் வந்த சருக்கம்.

௧

அரயனு யெரோதே யூதேயா தேய மாளுங் காலம்
பெருமைகொள் பெத்திலேகேம் பெயரிய நகரிலேசு
திருவவதாரஞ் செய்த தினத்திலே சேணிற் றோன்றித்
தெரியவே வான் மீனொன்று திகழ்ந்தது கிழக்குத் திக்கில்

௨

வான மீன் பிறக்குமென்ற வரன் முறையறிந்திருந்தோ
ரான சாஸ்திரிகள் கண்டே யகமகிழ்ந்த விடம் விட்டுப்
போனவ ரெருசலேமிற் போந்திடந் தெரிந்துக்கொள்ள
மானவர் தம்மை யூதர் மன்னரெங்குதித்தாரென்றே

௩

வினவியுமவரைக் கண்டு வணங்கிட வேண்டி வந்தோ
மெனவுமே யுரைத்தாரிச்சொ லெரோதே மன்னவன் மே
டனைவருங் கூடி யுள்ளங் கலங்கி யாசாரிமாருஞ் [விப்
சனங்களின் வேதபாரகரு மொன்றாய்ச் சாரக் கூட்டி

௪

எவ்விடங் கிறிஸ்து வந்து பிறப்பதென்றானெரோதே
யவ்வவர் யூதேயாவுட் பெத்திலேகேமா மென்று
ரிவ்வித மென்னேவென்னில் யூதேயா விடையிருக்கு
மொவ்வொரு வரசவூர்க்கு முன்னதம் பெத்திலேகேம்

௫

நீ யெதனுலென்றானஞ் சனங்களாய் நிகழுகின்றோ
ராயவ ரிசிரவேலர் தம்மையே யாளப்போகு
நாயக ருன்னிடத்திற் புறப்பட னண்ணுவாரென்
றேயவே யெழுதித் தீர்க்கதரிசியா யிருப்ப தென்றார்.

௬

என்ற சொற் கேட்டலோடு மெரோதே மன்னவ னவ்வூரிற்
சென்றவராயிருந்தே செப்பு சாஸ்திரிகண்மாரைத்
தன்றனக்குள்ளே யுண்மைதான் றெரிந்திடவே கூவா
நின்றிரகசியமாக நிகழ்ந்த வவ்வான மீனம்

௭

தோன்றிய காலந் தன்னைச் சொற்றிடக் கேட்டுணர்ந்தே
யான்ற பெத்திலகேமுக் கன்னவரைத் தானே யனுப்பி
யூன்றியே யாய்ந்துபார் மினுதித்த வப்பிள்ளைச் செய்கை
சான்றதேனும்போல் வந்து சரணஞ் செய்திடுவேன் யானு

அ

ஆதலாற் றிரும்பி வந்தே யறிவிக்க வேண்டு மென்றான்
பூதலம் புரப்போன் சொல்லைப் புந்தி யுட்கொண்டு போனார்
சோதிசெய் வான்மீன் றோன்ற றெருட்டு மெய்ச்சுதனார் தங்கு
மாதலந் தாங்கள் சேருமட்டு முன்வரவே கண்டார்.

௯

கண்டவர் மகிழ்ந்தார் வீட்டிட் சென்றுகாண் முளையைத் தாயா
யண்டிய மரியாளென்னு மம்மையை மகிழ்ந்து கண்டார்
தண்டனிட்டடி பணிந்து தங்கள் பொக்கசந் திறந்துட்
கொண்ட பொன் றூபவர்க்கங் கோதறு வெள்ளைப் போளம்

௰

இவைகளை மகவாயுற்ற வேசுநாயகர் முன்வைத்தே
யவர்கள் காணிக்கையாக வளித்தனர் தெய்வவாற்றாற்
செவிகொளச் சொல்லச்சொன்ன வெரோதேபாற் சென்றிடாமற்
றவவிவர் கனவு கண்டபடியே தந் தேயஞ் சார்ந்தார்.

---

## பனிரண்டாவது வயதிற் றேவாலயஞ் சென்ற சருக்கம்.

க

எருசலே நகரிற் றெய்வவாலயத்தில் யூதர்களியற்றிடும் பஷாப்பேர்
பெருகு பண்டிகைக்கு வருடங்கடோறும் பிரயாண முறுவதுபோல
மரியம்மையோசேப்பிருவருந் தங்கண் மைந்தனும் வந்தருளுலகோர்க்
கொரு பிதாவான வேசு நாயகருக் கொன்றிய பனிரண்டாம வயதில்

உ

மைந்தனை யழைத்துக்கொண் டெருசலெம் போய்மகிழ்ந்திருந்தே திரும்
லந்த வாலயத்திற் றங்கின ரியேசு வஃதிருவரு மறிகிலராய் [புகையி
வந்த நம்மவரோ டேகினானென்றே மதித்தொருநாட் பயணம் போய்ப்
பந்துவானவரின் மித்திரரிடத்திற் பார்த்துங் காண்கிலர்கள் பாலகனை

௩

திரும்பிப்போ யெருசலே நகரெங்குந் தேடினார் மூன்று நாளின்பின்
பெரிய வாலயத்திற் போதகர் நடுவண் பெற்றியுற்றிருப்பதும் பேசப்
பிரியமோடவர்கள் கேட்பதுமவரைப் பிரத்தியுத்தரங்கள் கேட்பது
கருகிருந்திவர் நற்புத்தியுஞ் சொல்லினருமையு முவப்பவருவப்பும் [மாங்

௪

கண்ணினாற் கண்டாரீன்றகாலத்தின் களிப்பினும் பெருங்களிப்படைந்தா
ரெண்ணியே யதிசயித்தன ரவரை யீன்ற தாய் மைந்த வெங்கட்கேன்
பண்ணினா யிப்படிக்குனைத் தேடிப் பாதபித்துன் பிதாயானுட் [ப்போர்
புண்ணடைந்தனமே யென்றனளொளியாய்ப் புவிப்பவவிருட்கு வந்திரு

௫

என்னையே நீவிர் தேடிட வேண்டு மென் பிதாக்கடுத்தவைகளினுன்
மன்னியே யிருக்க வேண்டியதென்று மதிக்கிலிரோ வெனவுரைத்தா
ரன்னவர் மனிதத் தன்மையோராதலாலிவரகப் பொருளமையச்
சொன்ன சொல்லுண்மை நினைந்திலர் நினைந்தார் சுதன்றம்மோடுவைமா
[லிலேயே

௬

பெற்றதாய் தகப்பனென்றிடும் பெயரைப் பெற்றவரோடு மங்கிருந்துஞ்
சற்றுந் தாமதியாதிறங்கி நாசரேத்தாந் தங்களூர் நண்ணினுருலக
முற்றுமேதங் கிழ்ப்படிந்திட வந்த முன்னவர் குரவர்க்குக் கீழ்ப்பட்
டிற்றனர் மரியம்மையோ விவர் செய்கை யாவையு முளத்தில் வைத்
[திருந்தாள்

௭

நாடோறு மியேசு வளர்ந்தனர் வளர ஞானமும் வளர்ந்தது ஞான
நீடுறவளரப் பராபரனிடத்தி னேசிப்பே வளர்ந்தது நேசப்
பாடுதான் வளர மானிடரிடத்திற் பரிந்திடுங் கிருபையே வளர்ந்த
தீடுகொள் கிருபை வளர்வதே சீவவிரட்சிப்புக் கேதுவாயிலகும்

௮

அழுக்கறுமணலா லமைந்தவோர் குளத்திலமர்ந்திடுந் தெளிந்த நீர
[தனுள்
விழுந் தகுமொளி சேர்ந்திலகுமோர் பொருடான் விழுந்தனைவருக்குந்
[தான் விளங்கி
மழுப்பிலா துணரக் காட்டலே போலமைந்தரா மியேசு தம்மிடத்திற்
செழித்த மெய்யொளியாம் பராபரன் கருணை சேர்ந்து தேர்ந்தவர்க்
[கெலாந் தெரியும்.

---

## ஞானஸ்நானச் சருக்கம்.

௧

யூதெயாதேயத்தி லுயரிய மாபோரா
யோதுறு மாசாரிமார்களி னொருவழியிற்
கோதகலுஞ் சகரியாவெனும் பேர்கொண்டோன்
மேதினியோர்மகிழ மெய்யுறிவொரு மகனாய்

௨

மானிடர்செய் பாவமா மன்னிருளோட
வீனமிகும் பேயாங்கூகை யிருகண்மூட
ஞானமெனுந் தண்டாமரை மலருதலகூட
மேனலோரா மளிகள் வேதமெ னிசைபாட

௩

பராபரனு ரருளாகிய வெயிலேபரவப்
புராதனமதி றேவ தேவனே புகல்வண்ணஞ்
சுராதிபனொரு பேருகிய சுதனார் புவியி
னராகிருதங் கொண்டே நானில மகவாகி

௪

குருபரராக வருள்கொண்ட வியேசுவெனு
மிரவியின் வருகின்றா ரென்பதையறிவிக்க
வருமொருபெரு வான்மீனென்னவே வந்தானித்
தரணியி லோவானென்னத்தகு நாமத்தோன்

௫

அன்னவனுக்கொருகாற் பரவுலகாதிபனாய்
மன்னிய பரமபிதா வாணி வனுந்தரமேற்
சொன்னதனா லந்நாண் முன்னுளே தொடரா
நன்னதி யோர்தா னின்னுடெவிடமு நண்ணி

௬

பாவமனிப்புச் செய்யப் படுதலின்முன்ன
மாவதாகிய கிரியையா யதனறிகுறியாய்
மேவிய ஞானஸ்நானத்தின் மெய்ம் மேன்மைதனை
யாவருமே யறிவா னறை தொழிலுறுகின்றான்

௭

அப்பொழுதினி லேசு கர்த்தர் தமவதார
முப்பதா மாண்டளவு முடிவுற வருநாளிற்
செப்புறு கலிலேயா தேயமதனை நீங்கித்
திப்பிய நதி யோர்தான் றீரமதிற் சென்று

௮

யோவான்றனை நோக்கியுன்னியே வந்ததனை
நாவார் வுற நவில நன்மொழி செவியுறலுந்
தேவாதிப குருவே தேவரீருமதிட நான்
மேவா ஞானஸ்நானம் பெறவே வேண்டும்

௯

என்னிடமது பெறுவா னெய்திடுகின்றீரோ
தன்னிகர் பரம பிதாவின் னருடரு சுதரே
மன்னவரே குருவே வானவரே யென்று
னன்னவனிடமே பின்பறை குவரே சையர்

௰

கட்டளையின்படியே செய்வது நங்கடமைப்
பட்டதெனவே யறிவாய் பரம பிதாவாக்கா
விட்டிடு சொற்படி ஞானஸ்நானத்திறைவா
சிட்டனே யிப்பொழுது செய்தருளுதி யென்றார்

௰௧

என்றலுமே யோவான் யோர்தா னீரினிடை
நின்றது செய்விக்கப் பெற்றனர் நிலவுலகோர்
பொன்றுறவரு பாவப் புணரியிலோர் புணையாய்
நன்றி செய்திட வந்த ஞானகர குருவே

வேறு

௰௨

ஞானஸ்நானத்தைப் பெற்றி யேசுவோ நன்னீர் நின்றுந்
தானதன் கரையிற் காலைவைத்துத் தங்கண்ணை வைத்தார்
வானுலகங்கள் வாரி திறக்கப்பட்டிருந்த வானின்
மோனமாய்த் தேவதேவனாவியோர் முகுளமாக

௰௩

ஒரு புறவென வியேசு மேல்வரவுறலே யோர்வா
னருகினினின்று தானுமே கண்டா காயவாணி
தருமொழியிவனு நேசந் தரித்திருக்கிற நந்நேசம்
பெருகிய குமரனென்றே பிறந்தகா லிஃதுங் கேட்டார்

௰௪

பாவிகட் கலவோ ஞானஸ்நானம் பாலித்தலிந்தத்
தேவ மைந்தருக்கு முண்டோவெனி லுண்டத் தீயபாவம்
யாவையு மேற்றுக்கொண்டே தீர்க்கத் தாமிழிந்ததானும்
பூவுலகோர்க்கே தேவ தேவனாற் புகன்றதானும்

---

## பிசாசு சோதனைச் சருக்கம்.

க

ஞானஸ்நானம் பெற்றியேசு நாதர் வைகுநாளிலே
யீனமார் பசாசு சோதனைப் படுத்துதற் கிவர்
வானவாவியால் வனாந்தரத்து வந்து சேர்ந்தனர்
போனநாண்முன் னாற்பதாய்ப் புகலு நாளிராப்பகல்

உ

நேசமாய்ப் பராபரனையே செபித்து நின்றுய
வாசமாயிருந்த பின்பு வந்து சேர்ந்ததாற் பசிப்
பூசல்செய் பசாசு வந்துபுகலு நீ பராபர
னாசை மைந்தனே லிக்கல்லை யப்பமாச் சொலென்றது

௩

மனிதனப்ப மாத்திரத்தாலேயான்று வான்பிதா
வினியவாய்ப் பிறக்குமெல்லா மொழிகளானுமே
கனமிகப் பிழைப்ப னென்னெழுத்தினைக் கரைந்தன
ரனைய பேயுமையரை யவிடம் விட்டுக்கொண்டுபோய்

௪

தனது சுத்த பட்டணத் தேவாலயத் தளத்தினா
லுனதவுப்பரிகையின் மேனிறுத்தி யோர் பராபரன்
றனையனாகினீ குதித்திடுதிதாழ வேயெனி
னினதுகால் கல்விடறிலாம னின்று தூதர் கைகளால்

ரு

தாங்கிக்கொண்டு போவரென்றெழுத் துளதுகாணென
வாங்கவரிடத் துரைத்ததா லதனுக்கையரு
மோங்கிடும பராபரனை யோர் பரீட்சையுஞ் செயும்
பாங்குறேலெனப் பினை யெழுத்துளதைப் பன்னினார்

சா

மற்றுமப் பசாசவரை மாவுயர்ந்தவரை யின்மே
லுற்றிடச் செய்வித்து லோகவாழ் விராச்சியங்களை
முற்று மான்மியங்களை மொழிந்துகாட்டி யிவைகணீ
பெற்றிடக் கொடுப்பனென்னைப் பிரியமாப் பணிந்தியேல்

எ

என்று சொன்ன தப்பொதே யியேசு போ போ சாத்தனே
நன்றிசெய் பராபரனையே பணிந்தெந்நாளுமே
யொன் றவற்காராதனை செய் யென்றெழுத துளதென்று
ரன்றொழிந்த தவர் பணிக டேவ தூதராற்றினார்

---

## நீக்கொதேமுச் சருக்கம்.

க

இருமலி யூதர் கலைவ னீக்கொதேமு இசழ் பரிசேயரி லிருந்தோ
ரிரவினி லியேசு நாதர் தம்பால் வந்திரபியே நீர் பராபரனாற்
றரணியில் வந்த குருவென வெமக்குச் சாற்றுகின்றன பராபரனை [தாமே
யொருவினோர் செய்ய வரியவா நீர் செய்யொவ் வொரற்புதங்களுந்

உ

என்றனனியேசு நாயகரெவற்கு மிணையிலா மறுபிறப் பெய்தா
லன்றி மெய்த் தேவனி ராச்சியங் காண்பதரி தரிதென்றன ரவனுஞ்
சென்றிடும் வயதின் முதிர்ந்தவன் றிரும்பிச் சனிப்பதெப்படி யனை
[வயிற்றைத்
துன்றவு நின்று தோன்றவும் படுமோ தூயரே யென்றனன் றூயோர்

௩

நீரினா லாவியாற் பிறவாதா னித்திய னிராச்சியங் காணா
னூனமாமிசத்தான் மாமிசம் பிறக்கு மாவியா லாவியே பிறக்குஞ்
சீருறப் பிறக்க வேண்டுமென்றேயான் செப்பியவதில்வியப் பெண்கொண்
மாருத மோது மோசையை யன்றிவருமிடம் போமிட மறியாய்

௪

அப்படிப்போன் மெய்ப் பிறப்படைந்தவனு மறிதாப்படுவனென்றிட லு
மெப்படி யிவையாமென்றன னிறைவரிசிரவேற் போதகனென்றே
செப்பிடும் பெயர் கொண்டினக் கிவை தெரியாத் திறமெவன் செப்புவன்
[கேணீ
தப்பிலதோர்ந்த தறைந்து கண்டதற்கே சாக்ஷியங் கொடுப்பதெம்மி
[யல்பாம்

௫

நீங்களிச் சாக்ஷி யேற்றிட மாட்டீா நிலத்தினுக்குரியவை சொலியும்
பாங்குடனே சித்திடவில்லையே மெய்ப் பரம காரியங்களை யுரைத்தாற்
சாங்கமாய் நேசித்திடுவீரோவென்று சாற்றிய பின்னரு மவனுக்
கோங்கிடு முணர்வு தோன்றிடும்படியே யுலகநாயகருரைத்தனரால்

௬

நித்திய பரலோகத்திருந் திறங்கி நின்று மங்கிருக்கின்ற மனிதப்
புத்திர ரொருவரன்றி யவ்வுலகிற் போனவனிலை யிலையெனு
மத்தமாச் சிவப்புக் கடல் வந்த விசரவேல ரப்பத்தினி லாசை
வைத்த போதவர் தீண்டிட வேண்ட வருந்தத் தொரு கம்பமீதே

௭

கத்தருத்தரவைப்பெற்ற மோசே வெண்கலவரவொன்றமைத்துயர்த்
[தச்
சித்தம்வைத்ததைப்பார்த்துய்ந்தனரது போற்றேவனு மானிடப் புதல்
[வர்
பத்தியாய்த் தம்மை நேசிக்குமவனைப் பாவத்தினாற் கெடாவண்ண
நித்திய சீவனடையவே யுயர்த்த நிற்பரே சிலுவையிலென்றார்

௮

காசினிற்றறைத்த முள்ளினையொடுக்குங் கவலையோர் முட்கொடுகளைவார்
சேலையினமுக்கைப் போக்குவோ ருழைமண்ணமுகதினாற் சீலமாக்கு
[வாக
டால மானிடர் பாவத் துயர்போக்கச் சத்திய தேவனு மனித
பாலகர் பாவிபோற் படும் பாட்டிற் பரிந்தவர் பரவுல கடைவார்

---

## தண்ணீரைத் திராட்ச ரசமாக்கிய சருக்கம்.

௧

ஓகையா யூதர் வாழ்வை யுறுங்கலி லேயாவுள்ள
காருங்கானு வென்னூரிற் கலியாண மாயிற்றுலொன்
றேகியங் கிருந்தா ளீயேசுவைப் பெற்றுவளர்த்ததாயவ்
வேகருஞ் சீடரோடங் கெய்தினார் மணஞ்செய்வோனுல்

௨

மூந்திரிப்பழச் சாறொன்று மணமுடிப்பவனைவேண்டி
வந்த யாவர்க்கும் போதாதென்பதை மரியாள் கண்டு
மைந்தரா யுலகுக்கெல்லா மன்னர் மன்னவராய்ப்பாவ
நைந்து நித்தியசீவிப்பை நரர்பெறக் குருவாய்வந்தோர்

௩

ஆகிய தேவர்தெய்வ வருள்பொழி முகத்தைநோக்கி
யோகையாய் நங்குமார னுரைத்தநம் மொழியைக்கேட்டே
சேகரஞ் செய்வானென்று திண்ணமா யெண்ணிப்பந்திக்
கீகுநற் றிராட்சச்சாறே யிலையென்று ளொதிரேநின்று

௪

அன்னைசொற் கேட்டவையரந்தரங்கத்திற் பூவிற்
றன்னைவந் தவதரிக்கச் சாற்றிய தேவதேவன்
மன்னுமா வியினுட்பட்டு மகிமைக்கே வந்துந்தேவ
னென்னகா லத்திலேது சொலப்படு மியற்றவேண்டும்

௫

இச்சரீரத்தைப்பெற்ற விவண்மனி தர்களுக்கேற்ற
விச்சையா லுரைத்தாளீதா வியற்றவும் படுமேவென்ன
வச்சமற் றன்னாய்நிற்கு மெனக்குமே யகப்பற்றென்றோ
நச்சுநாள்வந்ததில்லை யென்றனர் நயந்தசொல்லால்

௬

உண்மையை யுணர்ந்தாளுள்ளத் துவந்தன ளூழியத்தீர்
நண்ணு மினிவர்சொல்லாம் றானடத்துமினென்றிட்டாளா
லண்ணலார் யூதரங்கே யாடிடக்குடநான்கைந்து
தண்ணிரைக் கொள்ளத்தக்க சாடியா றிருக்கக்கண்டார்

௭

வேலைசெய்வாரைக்கூயிச் சாடிகள் வெற்றுநீரான்
மேலுறச் செய்மினென்றார் விரைந்தவர் நிரப்பினின்றா
ரேலும்பாத் திரத்தான்மொண்டிப் பந்தியிலிடுவிப்போன்பாற்
சாலவே கொடுமினென்றார் சவத்திற்கு முயிர்கொடுப்பார்

௮

மொழிந்தவப் படியத்தண்ணீர் மொண்டவ ரிடங்கொடுத்தா
ரிழிந்ததோ வுயர்ந்ததோவென்றென்றும் பார்த்திடும்படித்தாய்
வழிந்துற வாயில்விட்டு மதுரம்பார்த்து வந்துவந்து
கழிந்ததே மீதென்றோர்ந்தான் காரணந்தேர்ந்தானல்லான்

௯

மணவினை முடிப்பாற்கூவி வாழ்வுகொள்ளெவனுமுன்ன
ருணவுகொண்டிடுங்கானல்ல துண்டு பூரணித்தபின்ன
ரணுவும் வேண்டாதாயுண்மையானமித்திரற்குமீவான்
கொணர்தொறுந் தெவிட்டாவிந்தக் கொடிமுந்திரிகைச்சாறெங்கே

௰

தேடிவைத் திருந்தாயிந்தத் திரள்படுந் திரளோர்கூடி
கோடிகோடி யருண்டாலுங் குறைபடா தோங்கவென்றான்
பீடுசேர் மகிமையீது பெருஞ்சாடி நீர்நிறைத்த
வாடவ ரறிந்தாரன்றி யனைவரு மவராலோர்ந்தார்

௰௧

இம்மகிமையைக் கொள்ளற்புதத்தை யீங்கியற்றியேசு
தம்மகிமையைத் தெரித்தார் சாற்றிடக் காணனேகர்
செம்மைகொள் சீடர்மேன்மேற் செய்தனர் விசுவாசிப்பை
நம்மனோர் பொருட்டாமீது நாயகர்க்கொருபொருட்டோ

---

## சமாரியப்பெண் சருக்கம்.

க

சமரியா நாட்டின்வழி வரவேண்டியிருந்தநா றக்கயாகோபு
குமரன் யோசேப்பினுக்குத்தான் கொடுத்தகுவலயத்தருகினிலங்க
ணமருசீகாரென் றிடுநகர் கிறிஸ்துவடைந் தொருகிணற்றருகிருந்தார்
திமிரநீப்போன் வானுச்சி யெய்தியதாற்றேக சோகங்களையடைந்தே

உ

அவரது சீடருணவு கொள்பொருளைய வாவியந்நகரினுட் சென்றார்
நவிலுமந் நாட்டாளொருத்தி யக்கிணற்றினீரமே முகந்திடவந்தா
ளுவமையற்றவரப் பெண்ணினை நோக்கியுண்ண நீர்தருகுவாயென்று
ரிவரை யூதர்க்குஞ் சமாரியருக்கு மெப்பற்றுமிலையெயென்றெண்ணி

ங

யூதர் நீர்யானோ சமாரியளென்னை யுதங்கேட்டிடலென்றேவென்ன
நாதர் மெய்த்தேவனீவையுந் தண்ணீர்நல் சென்றாரின்னவரென்றுந்
தீதறவுணர்ந்தாயாகி னீயவரைத் திதிப்புறக்கேட்டிருப்பாய்நன்
னீதரே யுனக்குச்சீவ நீரதனைநேர்ந்திருப்பாரெனவுரைத்தார்

ச

ஆண்டவ நும்பான்முகக் கப்பாத்திரமு மரிதிந்தக் கிணறுமாழந்தான்.
றீண்டவொண்ணு தெவ்விடநின்று சீவதீர்த்தமுண்டா மிந்தக்கிணற் [றைத்
தோண்டியெங்கட்குத்தந்த நம்பிதாவாந்தொன்மையாக் கோப்பினும் [பெருமை
நீண்டவர் நீரோவவர் சுதர்மிருகநிறைவுறக்குடித்ததிந் நீராம்

ரு

என்னவியேசுநாத ரித்தண்ணீரெவ்வளவுண்ணினுந்தாகம்
பின்னுமுண்டாக்குமன்றி யெந்நீர்போற்பின்னர் தாகந்தணிக்காதாந்
துன்னியே யாவனென்ற னுற்கொடுக்குந்தூய நீருண்டனனஃதுண்
மன்னுநித்தியசீவனுக்குத் தண்ணீரைவழங்கு மூற்றாமென்றார்தெரிய

சா

அரிவைகேட்டையரே யென்றன்றாகமணையவு நீர்மொள்வானிங்கு
வருவதிலாமலிருக்கவுமந்நீர் வழங்குவி ரெனக்கெனவள்ளல்
புருடனை நீபோயழைத்துவா வெனலும்புருடனென்றனக்கிலை யென்
பரமர்நீயில்லையென்றது நன்றுபாவையே யைவர்களிருந்தார் [றாள்

எ

இப்பொழுதிருப்போன் புருடனிற்கல்ல னீதுமெய்யேயெனவனிதை
செப்பியவினையாற் றெரிகிறேன்றீர்க்க தரிசியென்றும்மை யான்றெ [ளிவா
யெப்பொழுதினு மெம்பிதாக்களிம்மலையிற் றொழுதனரெருசலேந்தல [த்திற்
றப்பறத்தொழவேவேண்டு மென்கின்றீர் நீவிரென்றனடகையவரும்

௮

வனிதையேயென்னை நம்புநீ நீங்கள்வரை யெருசலேமலாமலுமே
யினியெங்கணும் பிதாவைத்தொழுங்கால மெய்திடப்பெறுமென்று
மனதறியாததைத் தொழுகின்றீர் மனமறிந்திருப்பதையாங்கள் [நீவிர்
கனமுறத் தொழுதுகொள்கின்றோ மிந்தக்காரணமென்னவென்றாலோ

௯

இரட்சிப்பு யூதரிடத்திருந்தெய்துகின்ற தென்றும்மிதுவானாற் [லும்
சிரத்தையோடுண்மையாய்ப் பணிந்திடலைச்செய்பவர் பிதாவையாவியி
பருத்தவுண்மையிலும பணிந்துகொள்காலம பரவியேவருமிப்போழ்
[திதுமே
வரப்பெற்றதென்று மேனினிற்றம்மைவாய்மையாய்ப் பணிந்துகொ
[ள்பவரை

௰

தேடுகின்றார் மெய்ப்பிதாவென்றுந்தேவ தேவரேயாவியாகின்றார்
நாடியே யவரைப்பணிந்துகொள்கின்றோர் நல்லவாவியிலுமுண்மை
நீடியே பணியவேண்டியதென்று நிச்சயமாயுரைத்தனர்சந் [யிலு
தோடமுட்சனித்து நூல்வழியுயிந்த தொன்மையையரிவை சொல்கின்
[றாள்

௰௧

அய்யரே கிறிஸ்துவெனப்படு மேசியாவருவதையறிவேனத் [யோர்
துய்யரெய்திடுங்கால் யாவுமெங்கட்குத் தோற்றுவிப்பாரெனத் தூ
தையலேயுன்னோடுரைசெய் நானவர்தானென்று சாற்றினரந்தவேளை
வையகத்தோர்க்குச்சீவ நீரளிக்கவந்த ருளந்தரவுலகோர்

௰௨

சீடர்கள்வந்தேமங்கை யோடையர்செப்பிடுமொழிக் கதிசயித்தா
ராடிலர்வார்த்தையொன்றுமப் போதவ்வரிவைதன் குடத்தைவைத்
தோடியேசென்றந்நகரரைநோக்கி நான்செய்தயாவையுமொருவர் [தூரு
கேடுறுவண்ணமொழிந்த னரவர்தான்கிறிஸ்துவோ நீவிரங்கெய்தி

௰௩

அன்னவரைப் பார்த்திடுமின்களென்றா ளாதியோர்காலத்தில்யூது
ரொன்னலராற் றந்தேயம்விட்டேக வுற்றபோதப்பகைவரையே
துன்னியகாரணத்தினால்யூதர் துறந்திடக்கீழ்மையையடைந்தா
ரென்னவாழ்சமாரியாரந்தச் சிகாரிருந்தும்வந்தையர்பாலடைந்தார்

௰௪

இதற்குள்ளே சீடரிரபியே பொசியுமென்று வேண்டிக்கொளக்குருவோ
வதற்குநான் பொசிக்கவுங்களா லறியாவமுதமுண்டென்றனரவர்க
ளெதிர்க்கெதிர்நோக்கி யொருவருக்கொருவ ரியாவரூண்கொணருவ
[ரென்னத்
திதிப்புறுகருணைக்கடலவரென்னை யனுப்பினோர்சித்தத்தின்படியே

௰௫

செய்தவருடையகிரியையை முடிப்பதேயொறைற்செய்யும் போசனமென்
றையமற்றிந்தவுலகினோர் வழக்கமாகவேசொலலுங்காரியங்கண்
மெய்யுறுமுவமையாகவே காட்டிவிளம்பினார்பற்பலமொழிக [லும்
ளெய்தியசமாரியாரதைக் கேட்டதாலும் பெண்ணிசைத்த சொல்லா

௰௬

அனேகம்பேர் கிறிஸ்துநாயகர்பேரி லன்புவைத்தருகினில்வந்து
சினேகமுற்றிரவீ யெங்கள்பாற்றங்கல்செய்திட வேண்டுமென்றுரைக்க
மனோரதப்படியேயிரண்டு நாளங்குவதிந்தனரவருபதேசத்
தினாற்பினுஞ் சிலர்கள்விசுவசித்தே முன்செப்பிய மங்கையைநோக்கி

௰௭

நலமிகச்சொன்ன நின்மொழியதனானாங்களன்படைந்ததேயன்று
மலரெனும்பெயரைக் கேட்டவர்கண்டம்மலர் மணமறிந்ததுபோல
நிலைமையாமவருபதேசத்தைக் கேட்டுநிச்சயமாகவேகிறிஸ்தா
னுலகரட்சகரென்றறிந்தியாமன்பி லோங்கினோமென்றனர்தாமே.

---

## காற்றையுங் கடலையுமடக்கிய சருக்கம்.

௧

உலகமெலாம் புகழ்மகிமைக் கிறிஸ்துநாயகர் பலரையொருங்குகண்டு
கலிலெயநாட்டி னிடு வாங்கறங்குதிரையேரியினைக்கடந்துமேற்கா
யிலதுகரையுள கெர்கேசேனர் நாடெய்திடக்கட்டளையிட்டாரா
லலைமலியவ்வேரியினைக் கலிலேயாக்கடலென்பாரந்தநாட்டார்

௨

திரையெழும்பி நுனிவளைந்து மிகவொலித்துக்கரையருகே சென்றுச்
[சென்றுத்
தரையினிடைப்படிவதுதான் றன்னிடத்துங் கிறிஸ்துகுருசார்தல்கண்டு
விரைவுடனக்கடலு மெழுந்தெதிர்கொண்டே தலைவணங்கி விளம்ப
[வாந்தோத்
திரமுடனே பலதண்டனிடுவதுபோன் மகிமைகொளத்தேவருக்கே

௩

இத்தகையதாங்கடலைப் பிற்படுத்தப்படவுதனி லேறியேசு
கத்தரிருந்திடும்போது சீடர்களும்பின்னர்வந்து கருத்தாயுற்றார்
தத்துமரக்கலன்செல்லுங் காலலைகைத்தன்மையினாற் சரேரென்றேயா
பத்துவிளைத்திடுந்தன்மைத் தாய்த்தோற்றப்படவு நடுக்குறவப்பவ்வம்

௪

பொங்குதலையடைந் தலைகளெழுந்தெழுந்தொன்றுடனொன்று புணர்ந்
[தேகித்தே
யெங்கணும்பேரிரைச்சலிட்டுக் கொந்தளிப்புற்றிடச்சூறை யெழும்பி
[மோதக்
சங்குதகரைகாணாராய்ப் புணையிருக்குமிணையிலார் துணைக்கண்ணாராய்ப்
பங்கமுற்றோமென்றெண்ணித் தங்களைத்தாங் காப்பாற்றப்பதறிக்கொ
[ண்டு

௮

வனிதையேயென்னை நம்புநீ நீங்கள்வரை யெருசலேமலாமலுமே
யினியெங்கணும் பிதாவைத்தொழுங்கால மெய்திடப்பெறுமென்று
மனதறியாததைத் தொழுகின்றீர் மனமறிந்திருப்பதையாங்கள் [நீவிர்
கனமுறத் தொழுதுகொள்கின்றோ மிந்தக்காரணமென்னவென்றாலோ

௯

இரட்சிப்பு யூதரிடத்திருந்தெய்துகின்ற தென்றும்மிதுவானும் [லும்
சிரத்தையோடுண்மையாய்ப் பணிந்திடலைச்செய்பவர் பிதாவையாவியி
பருத்தவுண்மையிலும பணிந்துகொள்காலம பரவியேவருமிப்போழ்
[தினுமே
வரப்பெற்றதென்று மேனெனிற்றம்மைவாய்மையாய்ப் பணிந்துகொ
[ள்பவரை

௰

தேடுகின்றார் மெய்ப்பிதாவென்றுந்தேவ தேவரேயாவியாகின்றார்
நாடியே யவரைப்பணிந்துகொள்கின்றோர் நல்லவாவியிலுமுண்மை
நீடியே பணியவேண்டியதென்று நிச்சயமாயுரைத்தனர்சங் [யிலு
தோடமுட்சளித்து நூல்வழியறிந்த தொன்மைமையபரிவை சொல்கின்
[றாள்

௰௧

அய்யரே கிறிஸ்துவெனப்படு மேசியாவருவதையறிவேனத் [யோர்
துய்யரெய்திடுங்கால் யாவுமெங்கட்குத் தோற்றுவிப்பாரெனத் தூ
தையலேயுன்னோடுரைசெய் நானவர்தானென்று சாற்றினரந்தவேளை
வையகத்தோர்க்குச்சீவ நீரளிக்கவந்த ருளந்தரவுலகோர்

௰௨

சீடர்கள்வந்தேமங்கை யோடையர்செப்பிடுமொழிக் கதிசயித்தா
ராடிலர்வார்த்தையொன்றுமப் போதவ்வரிவைதன் குடத்தைவைத்
தோடியேசென்றந்நகரை நோக்கி நான்செய்தயாவையுமொருவர் [தூரு
கேடுறுவண்ணமொழிந்த னரவர்தான்கிறிஸ்துவோ நீவிரங்கெய்தி

௰௩

அன்னவரைப் பார்க்கிடுமின்களென்றா ளாதியோர்காலத்தில்யூத
ரொன்னலராற் றந்தேயம்விட்டேக வுற்றபோதப்பகைவரையே
துன்னியகாரணத்தினால்யூதர் துறந்திடக்கீழ்மையையடைந்தா
ரென்னவாழ்சமாரியாரந்தச் சீகாரிருந்தும்வந்தையர்பாலடைந்தார்

௰௪

இதற்குள்ளே சீடரிரபியே பொசியுமென்று வேண்டிக்கொளக்குருவோ
வதற்குநான் பொசிக்கவுங்களா லறியாவமுதமுண்டென்றனரவர்க
ளெதிர்க்கெதிர்நோக்கி யொருவருக்கொருவ ரியாவருண்கொணருவ
[ரென்னத்
திதிப்புறுகருணைக்கடலவரென்னை யனுப்பினோர்சித்தத்தின்படியே

௰௫

செய்தவருடையகிரியையை முடிப்பதேயெனுற்செய்யும் போசனமென்
றையமற்றிந்தவுலகினோர் வழக்கமாகவேசொலலுங்காரியங்கண்
மெய்யுறுமுவமையாகவே காட்டிவிளம்பினார்பற்பலமொழிக [லும்
ளெய்தியசமாரியாரதைக் கேட்டதாலும் பெண்ணிசைத்த சொலலா

௰௬

அனேகம்பேர் கிறிஸ்துநாயகர்பேரி லன்புவைத்தருகினில்வந்து
சினேகமுற்றிரபீ யெங்கள்பாற்றங்கல்செய்திட வேண்டுமென்றுரைக்க
மனோரதப்படியேயிரண்டு நாளங்குவதிந்தனரவருபதேசத்
திறற்பினுஞ் சிலர்கள்விசுவசித்தே முன்செப்பிய மங்கையைநோக்கி

௰௭

நலமிகச்சொன்ன நின்மொழியதனானுங்களன்படைந்ததேயன்று
மலரெனும்பெயரைக் கேட்டவர்கண்டம்மலர் மணமறிந்ததுபோல
நிலைமையாமவருபதேசத்தைக் கேட்டுநிச்சயமாகவேகிறிஸ்தா
மூலகரட்சகரென்றறிந்தியாமன்பி லோங்கினோமென்றனர்தாமே.

---

## காற்றையுங் கடலையுமடக்கிய சருக்கம்.

௧

உலகமெலாம் புகழ்மகிமைக் கிறிஸ்துநாயகர் பலரையொருங்குகண்டு
கலிலெயநாட்டினடு வாங்கறங்குதிரையேரியினைக்கடந்துமேற்கா
யிலதுகரையுள கெர்கேசேனர் நாடெய்திடக்கட்டளையிட்டாரா
லலைமலியவ்வேரியினைக் கலிலேயாக்கடலென்பாரந்தநாட்டார்

௨

திரைபெழும்பி நுனிவளைந்து மிகவொலித்துக்கரையருகே சென்றுச்
[சென்றுந்
தரையினிடைப்படிவதுதான் றன்னிடத்துங் கிறிஸ்துகுருசார்தல்கண்டு
விரைவுடனக்கடலு மெழுந்தெதிர்கொண்டே தலைவணங்கி விளம்ப
[வாந்தோத்
திரமுடனே பலதண்டனிடுவதுபோன் மகிமைகொளத்தேவருக்கே

௩

இத்தகையதாங்கடலைப் பிம்படுத்தப்படவுதனி லேறியேசு
கத்தரிருந்திடும்போது சீடர்களும்பின்னர்வந்து கருத்தாயுற்றார்
தத்துமரக்கலஞ்செல்லுங் காலலைத்தன்மையினாற் சரேரென்றேயா
பத்துவிளைத்திடுந்தன்மைத் தாய்த்தோற்றப்படவு நடுக்குறவைப்பவ்வம்

௪

பொங்குதலையடைந் தலைகளெழுந்தெழுந்தொன்றுடனொன்று புணர்ந்
[தேகித்தே
யெங்கணும்பேரிரைச்சலிட்டுக் கொந்தளிப்புற்றிடச்சூறை யெழும்பி
[மோதக்
ங்குதகரைகாணாராய்ப் புணையிருக்குமிணையிலார் துணைக்கண்ணாராய்ப்
ங்கமுற்றோமென்றெண்ணித் தங்களைத்தாங் காப்பாற்றப்பதறிக்கொ
[ண்டு

௫

சீடர்களெல்லோரு மென்னசெய்வோஞ் செய்வோமென்று திகைத்தார்
ரோடவர்கள்குடிமுழுதும் புவிமுழுதுங்காப்பாற்றுமுலகநாதர் [சீட
முடியகண்ணுடையவராய்ப் படுத்தனந்தல்செய்கின்றார் முன்னர்வந்து
வாடுமெமைக்காப்பாற்றுமென் றெழுப்பினார் கூளிவந்ததோரார்

௬

அவ்வேலையயரெழுந்தப்ப விசுவாசிகாளஞ்சாதிரென்
றிவ்வேலையுலகைசமை யதட்டினாரிம்மென்னு மளவிலோய்ந்து
செவ்வேயுற்றமர்ந்தவதைப் பார்த்தவர்கள் வியந்திவர்தஞ் செய்கை
[யென்னே
வெவ்வேலை வெஞ்சூறையஞ்சினவேயென்றுவந்து மெய்யன்புற்றார்.

---

## திமிர்வாதந் தீர்த்த சருக்கம்.

௧

ஏகநாதர் கபர்நகூமென்றுபேர்
பேசலுற்றுப்பெருங்கலிலேயநற்
றேசந்தன்னிற் சிறந்தநகரிடை
யாசைபோடுமமர்ந்திடுங்காலையில்

௨

படுக்கையைவிட்டுப் பக்கத்திற்காலினை
னடக்கொணாதவனானும்வருந்துவோன்
விடுக்கொணாத் திமிர்வாதமிருந்தகா
லொடுக்கப்பட்ட வொருவனவ்வூருளான்

௩

அய்யர் வைகுமகத்துறுவாயிலின்
மொய்தல்கொண்டளவில்லவர்மொய்த்தலா
லெனயுநோயுடையானுக்கு நட்டவர்
செய்திடுமுறவோர்களுஞ்சிந்தித்தார்

௪

எவ்வழிக்கொண்டிவனை யெடுத்துப்போய்ச்
செவ்வைசெய்திடவையர்முன்சேர்த்திட
லிவ்வழிப்படவேதொன்றுமில்லையே
யவ்வழிச்செய்தலே நன்றென்றுற்றுவார்

௫

கட்டிலோடுமெடுத்துக் கயிற்றினைக்
கெட்டியாகமுடிந்துக் கிளப்பியே
விட்டுவீட்டின் மேலேறிவிரைந்துபோய்த்
தொட்டிழுத்துத் துளைவழியிட்டனர்

கா

அளவிலாப்பிரயாசை யடைந்துபோய்க்
களைகணுயகர் கண்ணின் முன்வைத்தனர்
வெளியிற்பாடைப் பிணத்தைவிழிப்பிக்கும்
வளமைசேர் மகிமைப்படும் வள்ளலார்

எ

கொண்டுவந்தவர் கொண்டமெய்யன்பினைக்
கண்டுவந்து கவலையறுத்திட
விண்டுவாய்மலர் வேதனையோனைநின்
னண்டுபாவ மனிப்படைவுற்றது

அ

என்றுகூறின ரேயபரிசேயர்
துன்றிடும்வேத பாரகர் சொற்றதை
நின்றுகேட்டலு நெஞ்சிற்றுடிப்புற்றே
யின்றிவன்சொன்ன சொல்லென்னவாகுமே

கூ

தேவதேவன் றிருவருளால்சொல
வாவதையிவனுற் சொலவாகுமோ
யாவனின்னவன் றேவவிகழ்ச்சியான்
பாவியென்று பரியாலோசிப்புற்றார்

ய

ஈதறிந்த வியேசுகிறிஸ்துவும்
யாதுநீ விருளத்தினிலெண்கின்றீ
ரோதலோ வெளிதோதி யவண்ணமே
யாதலோ வெளிதாகுவதியாதென்று

யக

ஆயினும்பவந்தன்னை யவனியி
னேயர்பான் மனிப்புச்செயுநீதியை
தாயனுமனிதச்சுதன் றேய்ந்ததை
யேயநீவிருங்காணுங்களென்றுதான்

யஉ

விழுந்தவண்ணங் கிடக்கும்வியாதியோற்
கெழுந்துபாயலெடுத்து வீடெய்தென
மொழிந்தனர் மொழிந்தாங்கவன் முன்சென்றான்
கழிந்தவன்பு கடவுளிடம்வைத்தே

யங

வேறு.

எல்லவருங்கண்டு பிரமிப்புற்றிம்மான்மியத்தை யெய்தியச்சஞ்
சொல்லவரும்பாவ மன்னிப்பதிகாரமானவன்பாற் றோற்றுவித்த
வல்லபராபரன் மகிமைகளையெண்ணித் துதிகள்வாயாரச்சொல்லி
நல்லவிசுவாசிப்புட்கொண்டிவரைச் சூழ்ந்திருந்தார் நட்பினோடும்.

## யவீரு மகளை யெழுப்பிய சருக்கம்.

க

தீவுதிராட்சப் பழக்குலைசெறிந்தே
தாவிபடர்ந்த கருங்கொடிகடம்மின்
மேவியேநாலல் வெயிலினும் விளங்கு
மோவவிலா விண்ணுடுக்கணங்களொக்கும்

உ

கபர்நகூமாநகர்க் கண்ணிடைக்கிறிஸ்து
வுபகரிப்போடன் பருக்குறுதிசெய்காற்
செபவெசமான் யவீரென்பவன் முன்னஞ்சென்
றபினயமோடு வணங்கியறைகின்றான்

ங

ஐயவெனதின் மகளானவண்மரிப்பை
யெய்திடுங்கால மீதாயினுநீரெய்தி
கையையவண்மேல் வைத்திடிற்கருணையாலே
யுய்குவளென்றானியேசு மேலுறுதிகொண்டான்

ச

கல்லறைக்குட்பட்டிருந்த சவங்கண்ணு
லெல்லவருங் கண்டிடவுயிர்த்தெழும்ப
நல்லருளேசெய்கிறிஸ்து நாதர்தம்பாற்
புல்லியசீடருட னெழுந்துபோனார்

ரு

ஏகிடும்போதி லீராறுவருடங்க
ளாகவுறும்பெரும்பா டுடையளாம்பெண்
டேகமுறும்பிணி செப்பவுமுள்வெள்கிச்
சாகவெணும்படித்தா ளொருவடானே

சா

பற்பலகாலமும் பாடுபட்டுத்தேடும்
பொற்குவையைப் பரிகாரிகள்கைபோக்கிச்
சொற்பமானாலுங் குணப்படலைத்தோயா
ளற்பகலாத்துயரா ளுவடன்னெஞ்சில்

எ

எப்பொழுதாயினு மேசுகிறிஸ்தேகு
மப்பொழுதேயவராடை தனையேதொட்
டிப்பிணிநீக்குவலென் றுறுதியெய்தி
யொப்பிலரேகவெதிர்பார்ப்ப ளொவ்வோர்நாளும்

அ

இவ்விதமாய்ப்பலநாளு முழந்தெய்ப்பா
டிவ்வியதேவரைக்கண்ட னள்பின் சென்றாள்
செவ்வைகொளன்போட வருத்தரியந்தீண்டி
யவ்விதநோயகன்றாள் குணமடைந்தாள்

௯

அத்தருணத்தெனைத்தொட்ட வராரென்றே
கித்தியர்கேட்டர் நெருக்குறுவர்யாருஞ்
சித்தத்தினாலுந் தெரிந்திலோமேயென்று
ரித்தகைபேதுரு மிருப்பவருமெண்ணி

௰

ஆண்டவரேயும்மைக் கும்பல்களடர்த்துந்
தீண்டினராரொன்று சொல்கின்றீரோவென்றார்சீர்
மாண்டவரென்னினின் றோர்வன்மைபுறஞ்செல்லக்
காண்டனனென்றா ரதைக்காரிகையுங்கேட்டாள்

௰௧

அச்சமுடனுண்ணடுங்கிவந் தடியில்வீழ்ந்தா
ணிச்சனுநினைந்ததை நிகழ்ந்ததையுஞ்சொற்றாண்
மெச்சியவர்நீதிடன்கொண் மெய்ம்மகளேயுன்னுள்
வைச்சவிசுவாச மகிழ்வித்ததுபோவென்றார்.

௰௨

வேறு.

ஆண்டவரிவ்வாறுரைசெயுங்காலை யவீருவினகத்திருந்தொருவ
னீண்டடைந்துன்றன் மகளிறந்தாளென்றி யம்பியேபோதகர்தம்மை
வேண்டியேதுன்பப் படுத்தலாலென்று மென்றனன்மேதினியோருண்
மாண்டிடுவோரைப் பிழைப்பிக்கவந்தவள்ளலார் கேட்டுரைக்கின்றார்

௰௩

யவீருவைநோக்கி விசுவசிப்புடனே மன்னவளிரட்சிக்கப்படுவா
டவறுறும்பயமுற்றி டேலெனவவன்றன் வீட்டினுட்சார்ந்திடும்போதே
யவரியாகோபு பேதுருயோவான் யவீரவன்மனைவியையன்றி
யெவர்களுமுள்ளே யேகிடாவண்ண மேகினாரிறந்தவட்பார்த்து

௰௪

அழுபவர்தம்மை யழுகவேண்டாமென் றவடுயில்கின்றனளென்றார்
மொழியினைக்கேட்டோர் மரித்ததே மெய்யாய்முன்னித்தாநகைத்த [னரைய
ரொழிவுறவிவரை வெளியினிற்போக்கி யுயிரிலாள்கையினைப்பற்றி
யெழுமகளேயென்றி யம்பினாராவியெய்தியே யெழுந்திருந்தனளால்

௰௫

அவட்குணவுகளைக் கொடுத்திடவாஞ்ஞையாற்றினரவள் பிதாவன்னை
யுவப்புடன் பிரமித்திருந்தன ருலகநாயகருஞற்றியவிதனை
யெவர்க்குமேசொல்லாதிருமினென் றுரைத்தாரியம்பிலாரவருமன் [படைந்தார்
கிவப்புறுங்குடைதற்பிடித் தவர்க்கன்றிநிழலினை யாவர்க்குந்தருமோ.

---

## விதவை மகனையுயிர்ப்பித்த சருக்கம்.

௧

கலிலேயா நாட்டிடைக் கனிசெய் காவள
நிலவள நீர்வள நிறைந்த நாயினூர்
பலர்களுஞ் சீடரும் பரிந்து சூழ்வரத்
தலைவராங் கிறிஸ்து நாயகர் முன்சார்ந்தனர்

௨

அந்தவூர் வாயிலை யணுகுங்காலையிற்
சந்திசெய்தா ரொருசவத்தை யன்னவன்
பந்துவு மன்பரும் பலருந் தாயுமே
யுந்திக்கொண் டடக்கஞ் செய்விக்க வோடுங்கால்

௩

பெருத்திடுங் குரல்விட்டுப் பெற்றதாயய்யோ
வொருத்தி நான் புருடனு மொழிந்து போயின
னிருப்பையென்றெண் ணினேனென்செய்வேனப்பா
மரித்து நீயிங்கு நான்மயங்கப்போயினாய்

௪

என்று பற்பல துயர்மொழி யியம்பியே
நின்றுநின் றழுவதை நேசித்தோரென்றும்
பொன்றுருவண்ணமே புரியவந்தரு
ளொன்றிய குருபர ருணர்ந்துட் கொண்டனர்

௫

அருகினில் வந்தவட் பார்த்தவளிடத்
தருகிய மனத்தரா யுரைத்த ழேலென
விருபுறத்தினுஞ் சுமந்தேகுவோர் நிற்க
வொருகரத்தாற் பிணமுற்ற பாடையை

௬

தொட்டெழு வாலிபா வென்று சொல்லிக் கூப்
பிட்டனர் பிணம்பட்டோன் பிழைத்துத் தூக்கத்தை
விட்டெழுவானென விரைந்தெழுந்து மெய்ச்
கட்டிரையாடினான் கவலை நீக்கினான்

௭

அனைவருங்கண் டதிசயித்து வந்தனர்
தனையனைப்பெற்ற வடன்மை சொல்லவோ
நினையவோ முடிவுறு நின்றவன்னள் பாற்
றுனிதவிர்த் தாண்டருள் செய்த தூயவர்

௮

தம்மகிமையை வெளிப்படுத்தத் தானிறந்
திம்மெனு மளவினி லெழுமினோனை
விம்மித மகிழ்வுற விடுக்கக்கண்டவ
ரம்மவீதென்ன வாச்சரிய மென்றெண்ணி

௯

வேறு.

பயமடைந்து மாதீர்க்கதரிசியானவர் நங்கண் பட்டாரென்றுந்
தயையுடனே மாதேவர் தமது சனங்களைச் சந்தித்தார்தானென்றும்
வியனுலகோர் சன்மத்தால் வருபாவந் தீர்ந்துய்த்தசீவன் மேவி
நயமுறவே யருள்செய் பராபரனை மகிமைப்படுத்தி நாடிநின்றார்.

---

## அய்யாயிரருக்குணவளித்த சருக்கம்.

௧

பாவிகளின் பாவமறவே பரிவுகொள்ளுந்
தேவர் கலிலேயாவுள சிந்துதனின் கீழ்பான்
மேவுமோர் வனாந்தரமதிற் செலமிடைந்தே
யோவலிலராய்ப் பலரொருங் கவர்பினுற்றார்

௨

நோயினரை நோயிலர்களாக்குபவை நோக்கி
யோய்வுறலிலார் பலர்களோடிவரல் கண்டார்
பாயவோர் பருப்பத மீதேறுப்புபருத்த
நேயமுறுசீடரொடு நேரிலரிருந்தார்

௩

அப்பொழுது யூதரயர் பண்டிகை பஸ்காவா
லெப்பதியரும் மெருசலே நகரமேகும்
குப்பலுளராய்த் தமதுபால் வருகுறிப்பைத்
துப்பியவியேசுவுந் திருக்கணிணைசாத்தி

௪

மனமுருகி வேலியறுவண் பயிரையொத்தா
ரெனவேயெணி பரமசுவிசேடமே வியம்பி
யுனதமுறவேண்டுவரை யுரிமையுறுவித்தார்
பனிருவர்களாகிய சீடர்கள் பரிவில்வந்தே

௫

ஏந்நகரோ வந்நகர மேகியிருந்தானைத்
தின்னிடவு மிக்குழவு செல்லவிடுமைய
வின்னவிடமோ வனாந்தரமென விசைத்தா
ரன்னவரோடேசு வூணளிப்பவர்கணீரே

௬

என்றவர்களுட் பிலிப்புவி னிதயமறிவா
னன்றிவர்க ளுண்ணுணவு நாங்கொளுவதெங்கே
நின்றுமெனவே வவணிக்கும் பல்கொடு நிற்போர்க்
கன்றே யிருநூறுபணவப்ப முணவென்றான்

௭

அந்திரேயா வென்பவ னப்பங்களைந்துதானோர்
மைந்தனிட முள்ளன வெம்மாத்திரமாமிக்க
இந்த மனிதர்க்கென வுரைத்தன னியேசு
பந்திகொடிருக்க வெவரும் பகர்மினென்றார்

௮

இருந்தவரை யாயிர ரதற்கோர் குறைவில்லார்
பெருந்தகையவ் வப்பமே யெடுத்தாசி பேசி
பரிந்து பகிர்செய்த வைகளைச் சீடர்பாலி
லருந்திறவவா வறவளித்திட வளித்தார்

௯

உண்டன ரொழிந்தனரும் பசிமகிழ்ந்தார்
கண்டு குருதேவர் குழூவுண்டு கழிப்பட்ட
துண்டுகளை வாருமினெனச் சுலவு சீடர்
மண்டியவை கூடைபனிரண்டின் மருவித்தார்.

௰

வேறு.

இவ்வித மகிமைகளி யேசு செய்ததை
யவ்வயினுற்ற வையாயிருங்கண்
டொவ்வொருவரு மிந்த வுலகிலின்னவர்
திவ்வியதீர்க்க மாதரிசியே யென்றார்

௰௧

தேவனாயகர் தம்முட்டோர்ந் திவரெலாங்
காவலனாய் நமையாக்கக் கண்ணுவார்
போவதே நலமெனத் தனித்துப் போயினார்
மேவிய மலையிற் சாய்ங்கால மேவிற்றால்

௰௨

பன்னிரு சீடரும் படவினாற்கரை
மன்னியே கபர்நகூம் வாழ்க்கை வந்தனர்
துன்னிய திருனாமே கடலுஞ் சூறையாற்
றன்னிலை மீறியே ததிம்பி யோங்கிற்றால்

௰௩

அத்தகையிரவு நாலாவதியாமத்திற்
கர்த்தர்தாங் கடற் கமலத்திற் கால்களை
வைத்து வைத்தே வரும்வரவைச் சீடர்க
டத்தளித்திட மனஞ்சடிதியிற் கண்டார்

௰௪

ஆவோவீதாவேச மென்றுள் ளஞ்சியே
கூவினர் கிறிஸ்துவும் கூவியே திட
மேவுமினஞ்சன்மி னென்னப் பேதுரு
தேவரே கடலின்மேற் சேறனீரெனில்

௰௫

என்னையு நீரின்மே லேறியும்மிடந்
துன்னிடச்செய்குவீ ரென்னத் தோன்றலு
மன்னவா றேகுவா யென்னவன்னவன்
மன்னிய படவை விட்டிறங்கி வந்தனன்

௰௬

அதிகமாங் காற்றைக் கண்டஞ்சியாழ்ந்திடுந்
ததியினிலையரே காப்பைத்தாருமோர்
கதியிலை யெனவவர் கையை நீட்டியே
பதிவுறப் பிடித்தறப்பப் பத்தியோ யென்னை

௰௭

சந்தேகப்பாட்டினைச் சார்ந்தனை யென்றே
வந்திருவரும் படவேறினார் வளி
மந்தமாயிற்றனைவரும் வணங்கி மெய்த்
தந்தையாம் பராபரன்றனையர்தானென்றார்.

---

## அறிவுணர்த்திய சருக்கம்.

௧

ஏசுநாத ரெடுத்துக்கொளப்படு
மாசினாட்கள் சமீபித்த வப்போதவ்
வீசருள்ள மெருசலே மெய்திடத்
தேசுறுந்தம் முகத்தைத் திருப்பியே

௨

முன்னந் தூதரை யேவினர் முன்பு செல்
லன்னவரய் யருக்கிட வாயத்த
முன்னிச் செய்யச் சமாரிய ரோரூரிற்
றுன்னினாரச் சமாரியத் துட்டர்கள்

௩

எருசலேமுக்குப் போக விங்கெய்தலாற்
றருகல மவருக் கிடந்தங்க வென்
றருவருப்புரை செய்ய வஃதறிந்
திருவரா மியாகோபும் யோவானுமே

௪

ஆண்டவ வெலியா செய்தவப்படி
நீண்ட வானத் திருந்து நெருப்புவந்
தீண்டுமிக் கொடியோரை யெரிக்கவே
வேண்டுங் கட்டளையாங்கள் விதித்திட

௫

தேவரீருக்குச் சித்தமுண்டோ வென்றார்
யாவிலும் வல்லரா மேசவர்களைக்
கோவமாங் குறிப்போசை குனித்தின்ன
வாவியுள்ளோ மென்றும் மையறிகிலிர்

௬

மனிதப் புத்திரன் வந்தது மானிட
ரினிய சீவவிரட்சிப்புக்கே யன்றி
யனியமாக வழித்திட வன்றென்றார்
நினைவறிந்து வேற்றார் நெறிச்செல்லுவார்

௭

போகும்போது வழியினிற் போந்தவ
னேகனுண்டவரே நீரெங்கேகினுந்
தேகச்சாயையைப் போலப் பின்சேர்பவ
னாகுவேனென்றன னதனுக்கையர்

௮

பரமலோகத்தைச் சுட்டிப் பகர்வராய்
நரிகளுக்குக் குழிகளு நாளும் விண்
ணிரியும் புட்கடகுக் கூடுகளுமிங்குண்
டொருவரா நரபாலக ரோய்ந்துபோய்

௯

தலையைச் சாய்க்கவுஞ் சற்றுமிடமிலை
யிலையென்றோதின ரேழையர் போலவே
புலக நாயகர் வேறேயொருவனை
நிலைமையா யென்பி னேசித்துவா வென்றார்

௰

என்றகப்ப னிறப்ப னடக்கம் யா
னன்று செய்திட வேண்டுமே யாதலா
னன்று நீரெனக்குத் தரவு நல்குஞ்
சென்று செய்தபின் செய்வனென் றானவன்

௰௧

தேவதேவனைச் சேர்ந்தவரே நித்த
சீவனுற்றவர் மற்றவர் செத்தவ
ராவரென்பதற்குக் குறிப்பாகவே
சாவடைந்தவரைச் சாவடைந்தவர்

௰௨

எடுத்தடக்குவர் நீ யெவ்விடத்தும் போ
யடுத்துத் தேவனிராச்சி யக்காமமை
தொடுத் தெவர்க்கும் பிரசங்கஞ் சொல்லென்றார்
தடுத்திடாதவன் சம்மதித் தேகினான்

௰௩

வேற்றொருவனவரை விழித்தைய
ஊற்றமோ டும்முடன் செல்ல வுற்றனன்
றேற்றமீது திறம்பலனா யினும்
மாற்ற மொன்றுண்டு மற்றஃ தென்னென்றால்.

௰௪

வேறு.

பெற்றதாய் தகப்பன் முதலாப் பெண்டு பிள்ளைகட்கும்
சுற்றத்தார் சோதரர்கடொன்மையுறு நட்பினர்க்கும்
மற்றுமுள்ளோர்கட்கு மிந்த வையகத்து வாழ்வினுக்கு
முற்றிடுஞ் சீவனங்கள் சுகதுக்கங்களை யுணர்ந்தும்

௰௫

அவர்க்கெல்லாமென்னை விட்டுவிடு மனத்தராகுவரோ
சவலைமிக நினைந்து நினைந் தழுதழுது சாம்புவரோ
நவநவமாய்த் தேகசுக நல்குமனையாள் சொற்ற
விவர்களை யொத்திருப்பளோ மற்றின் னுயிரைத் துறப்பளோ

௰௬

என்றவைகளையுணர்ந்தும் பின்னு மனமிருக்குமேற்
சென்றிடுவ னென்றுளத்திற் சூழ்ந்தவனைச் செப்புவா
னின்று நான் போய் வீட்டிலிருக்கிறவர் முன்னனுப்ப
லொன்றுமே கொண்டுவரும் படிக்கா முத்தரவுதரல்

௰௭

வேண்டுமென்று னதற்கையர் மேழியிற் கைவைத்துழுவோன்
மீண்டுப் பின்னுநோக்கின் விளைவடைவனாகுவனோ
வாண்டதுபோற் றேவனிராச்சியத்தினுக் காகானென்று
ரீண்டிவனை புதையற் பொன்னெனவர் மனதைத் தெரிந்தெடுப்பான்.

---

## பிறவிக் குருடன் கண்பெற்ற சருக்கம்.

௧

எருசலேமெனும் பெரிய வூரிடையிருக்கும்
பெரியதிரு வாலயமிருந்து பிரவேசித
தொருவி வருபோது வழியதனி லொருபிறவிக்
குருடனை யெதிர்ந்தன ரியேசு குருநாதர்

௨

பின்னர்வரு சீடர் பிறவிக் குருடனைக் கண்
டென்னவிது வென்னவிது வென்றுள மிரங்கி
யன்னையென மானிடர் பவத்தை யடியோடுந்
தன்னுடலை விட்டு விடுவிக்கவரு தந்தை

௩

அருகினிலே வந்தடி வணங்கி யனைவர்க்கும்
குருபரவிவன் குருடுகொண்ட பிறவிக்கு
வருவிது விவன்செய் பவமோ வலது மாதா
வுரிமைகொள் பிதாவிவருற்று பவமோ நீர்

௪

சொல்லி யருள்வீரெனவித் தூயரிதன் மூல
மல்லனிவனும் மிவன தன்னையு மேயல்லன்
புல்லிய பிதாவுமலன் போந்தவிது வெல்லாம்
வல்லன் மகிமைகள் வெளியில் வரவென வுரைத்தார்

௫

இவ்வுடலினில்லளவு மெக்கிரியையுஞ் செய்
தவ்வுல கண்டந்திடுவனென்றறைய வேண்டிச்
செவ்வையுறவே பகலிற் செய்பவைகள் செய்வெ
னெவ்வெவனுங் கிரியை யேலா விரவு வெய்தும்

௬

என்றன ரிவ்வாக்கிய வுள்ளீடிலகிருனே
துன்றலொளி யின்மை யிருளென்று சொனதாமா
னின்றவவர் சீடர்கணெருங்கினவர் நேரே
தன்றன் மகிமைக் குளொரு சாட்சிதரலானார்

௭

வாயினுமிழ்நீரை யொரு மண்டரை யுமிழ்ந்தா
ராயவதனாலளறு செய்ததை யெடுத்தார்
தூயபிறவிக் குருடனைக்கிடை துமித்தார்
போயி சிலொவாங் குளம்புகுந்து கழுவென்றார்

௮

பெற்றவர்கண் மற்றவர்கள் பெற்றவிரு கண்ணு
வுற்றவர்களாற் புவியிலுள்ள வைகளோர் வான்
பற்றுமொரு கோல் கைகொடுபார் மிசைநடப்பான்
சற்றுமதியாமலே சரேரென வெழுந்தான்

௯

மண்ணதனை வாரியிரு கண்ணினிடையிட்ட
வண்ணலது சொற்படியடைந்து கழுவுங்கால்
விண்ணுலகு மண்ணுலகு மேன்மைசெய் கிறிஸ்தைப்
பெண்ணொருவள் பெற்றுபெறு பேருவகை பெற்றான்.

௰

வேறு.

பார்த்தனன் றன்னைப் பார்த்தான் புவியினை பார்த்தானெல்லாந்
தீர்த்தர் பாலடைந்தே யந்தத் தேவரைப் பார்த்துவந்தான்
சேர்த்தவிக் கைகாலாகி யவயவத் திரளைவைக்குஞ்
சீர்த்தது கண்ணேயன்றி வேறிலை யென்று தேர்ந்தான்

௰௧

வானத்தின் கண்ணிருந்து வந்தனைவருக்கும் ஞானத்
தானத்தைக்கொடுத்து மோட்சத் தானத்தையடையச் செய்யும்
ஞானக்கண் டருங்கிறிஸ்து நாதரோர் குருடனுக்கே
யூனக்கண் டந்தாரென்ப துவக்குமோர் புகழுமாமே

௰௨

அப்பொழுதயலகத்தோ ரவன்றனை யறிந்தோர் யாரு
மிப்பொழுதிவன் குருட்டோ டிருந்திரந்திட்டானெவ்வா
றொப்பிலாக் கண்படைத் தானவனென்பா ருரித்தாய்ப் பார்ப்பார்
செப்பிடற் கரிதாமீதைச் செய்தவரெவரோ வென்பார்

௰௩

கண்ணிலாதவர்க்குக் கண்ணைத் தருமொரு கருவியிந்த
மண்ணுலகத்திலில்லை வானகத்தினு மிராதே
யெண்ணிடிலவனேயல்ல னிவனென்பாரவனே யென்பார்
திண்ணமாய் நமதுகண்ணே திறம்பிற்றோ வென்பார் சில்லோர்

௰௪

இவன்றன்னை யவன்றானா னென்றெத்தனை விதஞ் சொன்னாலும்
பவந்தனிற் குருடாய் வந்தான் பார்த்தன மிதுவரைக்கு
மெவ்னெவனெது சொன்னாலும் யாநம்போமென்பார் சில்லோ
ரவனிவன் சாயையாலே யவனிவ னென்பார் சில்லோர்

௰௫

தாரை தந்தாரைத் தந்தாரைகளினாற் காணாகாராய்
காரணமறியக் கூவாக் கண்ணனை நினது கண்ணைச்
சீருணச் செய்தார் யாவரென்றன ரவர்கள் சேர்ந்து
பூரணவொளிகொள் கண்ணான் பகலுவான் களிப்பிற்பொங்கி

௰௬

நேத்திரங்களினிற் சேற்றை நீவியிச் சிலோவா நன்னீர்
வார்த்திதைக் கழுவிவிட்டு வாவென்றாரேசு வென்னா
நாத்திதிப்புறச் சொனாமத்தொருவர் நானம்பிச் செய்தேன்
பார்த்தனனென்றும் பாராப் பாருள பொருள்களென்றான்

௰௭

எவ்விடத்துற்றானென்றா ரறியெனா னென்றுரைத்தான்
வவ்வியே யவனைக்கொண்டு பரிசேயர் வாய்விடுத்தா
ரவ்விய மிகுமனத்துப் பரிசேயரவனை நோக்கிச்
செவ்வை பெற்றதனை நின்கண் செப்புவாயென்று கேட்டார்

௰௮

நடந்ததைச் சொன்னான் கேட்டார் நடந்தநா ளோய்வுநாளாய்க்
கிடந்திடத் தக்கதன்றோ கிறிஸ்து வென்றுரைத்துக்கொள்வோ
னடங்கலுஞ் செய்ய வல்ல பராபரனாலனுப்பப்
படுந்தகையுடையானல்ல னென்றனர் பலர் தமக்குள்

௰௯

பாவியென்றெண்ணுகின்றீர் பராபரனனுப்ப வல்லா
னவனேலற்புதங்க ளெப்படி யவனாற் செய்வ
னீவிரே சொன்மினென்றார் சிலர்கணீர் நின்மினின்மின்
றேவனா நரனாவென்று கண்டெரிந்தவனைக் கேட்போம்

உ௰

என்று பற்பலருங் கூடியிவனையுங் கண்டிறந்து
நின்றவன்றன்னைப் பற்றிநீ யென்சொல்கின்ற யென்றார்
மன்றவுண் மகிழ்ந்துதீர்க்க தரிசியே வந்தாரென்று
னின்றுதான் றெரிந்த கண்ணனிவனெனனம் பாராகி

உக

தந்தை தாயரையழைப்பித்தும் மகன்றானையில்லா
னந்திலென் றுரைத்தீர் ரிற்குமவனெவனீரே பெற்ற
மைந்தனென்றுரைத்தாலிந் நான்மாசிலாக் கண்ணடைந்த
தெந்தகாரண நீர் சொன்மினென்றது யூதர்கூட்டம்

உஉ

அதற்கிவனெங்கண் மைந்த னந்தகனறிவோங் கண்டே
ரிதற்குக் காரணமே யாதுந் தெரிகிலோ மிவனுவாயுண்
முதிர்ச்சியானவனே சொல்வா னென்றங்கே முன்னரேயற்
புதத்தவியேசுவைத்தான் கிறிஸ்துவென்றவனைப் போக்கி

உங

ஆலயத்தெய்தா வண்ண மாஞ்ஞையை யூதர்செய்த
தாலவரதனுக் கஞ்சியறைந்தன ரதன்பின் யூதர்
சாலவே கண்படைத்தோற்கூய்ச் சருவேசன்றன்னை
மேலுறச் செய்நீ பாவியவனென விளம்பினரே

உச

தெரிந்தவன் பாவியென்று செப்பிடமாட்டேன் கண்ணை
யருந்தனமாகப்பெற்றே னென்றிடவதற்கு யூதர்
வருந்தவன் கண்ணிலென்ன செய்தனனென வகுத்தே
னிருந்தநீர் சிடராதற் கெண்ணியோ வினவுகின்றீர்

உரு

சொல்லுமினெனவே யூதர் தூய்மையில் சொற்கள்சொல்லி
நல்லனீயல்லை மோசேசீடரே நாங்கண் மோசே
யெல்லிடுந் தேவனுலே யியம்புறப் பெற்றானிந்தோன்
புல்லியெவ்விட நின்றிங்குப் போந்தனென்றறியோ மென்றார்

உசா

எனதுகண் டிறக்கக்கண்டுங் காணுதனென்னே வந்தோ
கனமிகுந்தேவர் பாவி சொல்லினைக் கேளார் காதான்
மனமுகந்தவன் சொற்கேட்பா ரென்பதும் வையந்தோற்றத்
தினமுதற்குருடு நீக்குஞ் சொல்லு மில்லெனலுந்தேர்ந்தோம்

உஎ

இப்படியிருக்கத் தேவனிடத் திருந்தெய்திலாரே
லெப்படி மகிமைசெய்வா ரவரென்றான் கிறிஸ்துவன்பன்
றப்பித யூதர் முற்றும் பாவத்திற் சனித்தோய் புத்தி
செப்புகின்றனையோவெங்கட் கென்றவற் செலுத்திவிட்டார்.

உஅ

வேறு.

பின்பவ னவர்களாற் பேதப்பட்டதை
யன்பருக் கருளி யேசுவு மறிந்தோர்காற்
றன்பரிசேயோடுங் கண்டவனைத்தான் பிதா
வின்சுதனிட மன்பாயிருப்பையோ வென்றார்

உகூ

அவனதற்கைய நானன்பு செய்பவ
ரெவரெனவவனைக் கண்டிருக்கின்ற யிப்போ
திவனின்றே டெதிர்மொழி யியம்புகின்றனன்
றவவெனப் புகன்றனர் தன்கணோர்ந்தவன்

௩0

விழைந்துள மகிழ்ந்துகண் டடியில் வீழ்ந்து வீழ்ந்
தெழுந்தெழுந் தாண்டவவாண்டவ வென
மொழிந்து நேசிக்கின்றேனென முன்றாழ்ந்தனன்
குழந்தைபோல் வந்தருள் குருவுங் கூறுவார்

௩க

கண்ணிலார் காணவுங் கண்ணரங்கக
நண்ணவு நியாயத் தீர்ப்புக்கு நானிந்த
மண்ணுலகினில் வந்தேனெனலு மங்குவந்
தண்ணிய சிலர் பரிசேயர் கேட்டதை

௩உ

நாங்களுங் குருடரோவென நவின்றனர்
நீங்களப்படியரேற் பாவ நிற்குமோ
யாங்கள் காண்கிறமென வியம்பலானும் பாற்
றேங்கிடுமது வென்றே கிறிஸ்து செப்பினர்.

---

## சமாரியன் சருக்கம்.

க

கத்தராங் கிறிஸ்துநாயகர் யூதேயாவின் கண்ணிருந்து மானிடர்க்குப்
புத்தி தேர்ந்திடவே மெய்ப்பராபரன்றன் பரபலவிராச்சியம் புகன்று
பத்தியுண்டாக்கிவருகின்றபோது பரிந்தொரு நியாயசாஸ்திரிவந்
தத்தவென் செய்தியானித்திய சீவனடைவனென்றுன வர்த்தெரிவான்

உ

என்னை நியாயப்பிரமாணமெழுதியிருப்பதெப்படிப் படிக்கின்ற
யின்னதைச் சொல்லுவாயெனறரி யேசுவிதற்கவனுன் பராபரனை
மன்னிய கத்தன்றனை முழுவிதயத்தானுமாத்துமத்திறைற்றனு
முன்னுமுன் சிந்தையானு மேயுனக்குற்றவனையுன் போலன்புசெய்வாய்

௩

என்றதாய்த்தானே யிருக்கின்றதென்றனி யேசுநீ நிதானமாய்ச் சொன்
[னாய்
நன்று நன்றந்தவண்ணமே செய்தானண்ணுவாய் பிழைப்பினையெனறார்
துன்றவன் றன்னை நீதிமானாகச் சொற்றிடச் செய்யவே விரும்பி
மன்றவு மடுத்துநின்றிடுபவனை மகிழ்ந்துரைத் தருளுவீரென்றான்

௪

ஒருவன்றானொருசலேமிருந் தெரிகோவுக்குப் போய்க் கள்ளர்கையுற்
[றான்
றிருடர்தாமவனையடித்துத் தேகத்திற் செம்புணுண்டாக்கிக் குற்றுயிராய்
மருவவேவிட்டுப்போயினாரந்தவழியிலாசாரியனொருவன் [னனால்
வருமிடத்திந்தவவத்தையோற் கண்டும் வழியைவிட்டொதுங்கிப்போயி

௫

அவ்விடத்தொரு லேவியனும் வந்தவற்கண்டவ்வி தம்விலகியேபோனா
னிவ்விதமிருக்கச் சமாரியனொருவனிவ் வழிவந்தனனிவனைத்
துவ்வுறுமவனைக்கண் டுளமுருகித்துயர்ந்தவன் காயமீதெண்ணை [தே
செவ்வை செய்திவுதிராட்சச் சாறிட்டுத்தூக்கித் தன்வாகனஞ்சேர்த்

௬

வேற்றிடம் போயோர் மண்டபத்திறக்கி மிகவுபசரித்துத் தானேகாப்
பாற்றிப் பின்னாளிற் பயணஞ்செய்போதோ பாதுசெய்வானங்கனொரு
[வற்
போற்றியோடழைத்துவெண் பொற்காசிரண்டுபோதாவி டிலதிகஞ்
[செய் பொன்னை
யேற்றியான்வருங்காற்றருவ னென்றளித்து மிவனைக்காத்திடவைத்துப்
[போனான்

௭

முன்னர்வந்தவனோவுயர்ந் தவனவனின் முடிகிப்பின்வந்தவனிழிந்தே
னன்னியனதன்பின் வந்தவனிவ்வாறான விம்மூவரிலடியா
லின்னலுற்றோனுக் குற்றவனெவனாயுனக்குத் தோன்றிடுகின்றதென்றா
சொன்னயந் தெரியான்றன்னையே பெரியானெனச் சொலக்கற்றுவந்
[வனும்

௮

இரக்கம் வைத்தவனைக்காத்தவன் றானென்றியம்பினானியேசுநாயகருந்
திருப்பிநீபோயந்தப்படியே செய்யென்றுதான்செப்பிவிட்டனரா [வே
லுரைத்தவீதுண்மையென்னை யோவென்னினுலகுளோர்யாருந் முற்
யொருத்தரை யொருத்தர் தம்மைப்போற் காக்கவுரைக்கு மெய்ப்
[தக்கட்டளையே

௯

பின்னருமந்தவிடம் விட்டுக்கிறிஸ்து பெத்தானியா வெனும்பட
[கொண்
சின்னதாநகரிற் சென்றனரங்கோர் தெரிவை மார்த்தாளெனும்பெயர
டன்னெதிர்கண்டு குருபரர்தம்மைத் தனதுவீடடைவித்துத் தக்க
வுன்னத பீடத்திருத்தினாளவளோடுடன்பிறந்தவன் பெயர் மரியாள்

௰

அய்யர்பாதத்தினருகிருந் தையராற்சொலும் வசனங்களனைத்து
முய்வுறும்வண்ணங் கேட்டுக்கொண்டிருந்தா ளூழியங்களினுழை மார்த்
பையவேவந் தாண்டவரிட மையவென்னைமாத்திர மிந்தப்பாவை [தாள்
னைவுகொளூழியங்களில் விடுதல்ஞாயமோ வுதவிசெய்திடுவான்

௰௧

தேவரீர்திருவாக்கா லுரைத்தருள்வீரென்றன டேவநாயகரு
மாவலானீயோவ னேகங் காரியங்களாவதாய்க் கவல்கின்றாயொன்றே
பூவுலகத்திற்றேடிடத் தேவைபுகன் மரியாடனைவிட்டே
யோவுறுநல்லபங்கையே தெரிந்துட்கொண்டன ளென்றனருயர்ந்தோர்.

---

## கெட்டுத் தேறினவன் சருக்கம்.

௧

இப்புவியின்மானிடரை யேசுநாயகர்திருத்துங்
துப்பதனைப்பரிசேயர் தூயரிவர்பாவிகளை
யொப்புக்கொண்டவருடனே யுண்கின்றாரென்றார்கள்
செப்பியவர்க்குவமைகளாற் செப்பினார்கிறிஸ்தையர்

௨

உங்களிலோர்மனிதனூறாடுகளையுடையானேற்
றங்கவைகடமினொன்றுதான் காணாதோடிவிட்டா
லங்கவைதொண்ணூற்றொன்பதாட்டைவனாந்தரம் விட்டே
யெங்கணிலுமோராட்டைக் காணளவு மேகானோ

௩

கண்டுபிடித்ததன்பின்பு களிப்புடனேதன்றோண்மேற்
கொண்டுவீடெய்திச்சினேக ரயலகத்தரைக்கூய்ப்
பண்டுகாணாவென்றனாட்டை யான்பற்றிவந்தே
னண்டியநீரென்போ லானந்திப்பீரென்கானோ

௪

ஈதுபோலொருபாவியினைத் தேடியிவனுக்குச்
சேதமிகப்படர்பாசியொதுக்கி நீர்தேறுவன்போற்
போதமறியறிவுவரப் புரிந்தளவிலாமகிமை
நீதிகொள்பராபரனை நேசிக்கும்படிச்செய்தல்

௫

வேறு.

சொற்றதையன்றியுமின்னமோ ருவமை சொல்கின்றா
ருற்றதோர் வீட்டினையுடைய ளாகியவோர் பெண்டான்
குற்றமிலாப் பொற்கா சொருபத்தைக் கொண்டாளேன்
மற்றவைதம் மிலோர்காசு கைவிட்டுமறைந்தக்கால்

௬

எவ்விடமீது கிடைக்குமீதெவ்வா றடைவேனென்
றெவ்வொரிடத்துந்தீப மெடுத்தலசொன்றலே
செல்லைவபுறத் தூசிகளை யொதுக்கித் தேடிப்பார்த்
தவ்விதமே செய்வாளது கண்கண்டிடுமட்டும்

௭

அந்த முயற்சி செய்யாளோ வவ்வாறறியீரோ
விந்த வியற்கை யெவர்க்குளதா மிதுமற்றோர்கள்
சொந்தமெனக் கொண்டே யடைவாரோ சொன்மின்க
டந்தனமேற்றந்தந் நசைவைத்தறகைதானே

௮

நாடியெடுப்போர் நட்டந் நண்ணுமென்றெண்ணித்
தேடியவவளே கண்டுபிடித்தாற் சிந்தைச்சந்
தோடமடைந்திட்டத் தவரைக்கூய்ச் சொல்லொண்ணுப்',
பாடுகள் பட்டென் பணமடைவுற்றேன்பார் மின்கள்

௯

ஈதிதுவென்றே காட்டிமகிழ்ந்தென்னிட்டங்கொண்
மாதர்களே நீவிருமகிழ்வீ ரெனவாயார
வோதுவளன்றோ மற்றவளைப்போ லொருவர்க்குச்
சேதமிலாப் பொற்காசு கிடைத்தாற் சிறிதேனும்

௰

எல்லாருங்கண்டிடு மானந்திப் பெய்துவரோ
வல்லானீதி மானதையறியின்வருவித்து
மல்லாடாமற் காசவனுக் கீவகையாகச்
சொல்லானேவக்கா சினள்விடவுந்துணிவாளோ

௰௧

அதுபோலொருபாவி யினைத்தேடியவனுக்கு
நதிநீரில்லாப்பாலை நிலத்தினன்னீரை
யுதையமுறச்செய்வார்போ லறிவூற்றுண்டாக்கிப்
பதியாம் பரமபிதாவிடமன்பு பதிப்பித்தல்

௰௨

வேறு.

பின்னுமோருவமை சொல்வார் பெரியவோர் மனிதனுக்கு
மன்னிருகுமாருண்டாய் வாழ்கின்றா ரவர்கட்குள்ளே
சின்னவன்றகப்பனைக்கூய்த் திரவியங்களைப் பங்காக்கி
யென்னதாம்பங்கை யென்பாலீந்திட வேண்டுமென்றான்

௰௩

அந்தச்சொற்கேட்டபோ தப்படியேசெய் தளித்துவிட்டான்
பிந்திச் சின்னாள்கழித்துப் பின்னவன் பொருள்கைக்கொண்டு
தந்தையைவிட்டுத் தூரதேசத்தைச் சார்ந்திருந்து
சிந்தைசிந்தித்தவாறே சீவனஞ் செய்யப்புகுந்தான்

௰௪

அவ்விதத்தாற்றன் சொத்தையழித்தபின்னத் தேயத்திற்
றவ்வைவாழ்வடைந்தபோது தானங்கே யொருவன்றன்னை
யவ்வையைப்போ லடுத்தானவனிவனைத் தன்பன்றி
செவ்வையாய் மேய்க்கச்சொல்லிச் செலுத்தினானவனுஞ் சென்றான்

௰௫

அவன் வயல்களிலே பன்றியனைத்தையு மேய்க்கும்போது
நவிலுமப்பன்றிதின்ன நல்லுணவாகவைக்குந்
தவிடதைத்தானே தின்று தன்வயிற்றினை நிரப்பி
யுவமையில்லாத துன்பமுற்றபின் புத்திதேர்ந்து

௰௬

அய்யோவென் றகப்பனாலே யனுப்பிடும் வேலைக்காரர்
செய்யும் போசனத்திற் சிந்துஞ் சேதத்தைத் தின்று தின்று
வையகத் தனேகசீவன் வாழுகின்றனவே யென்று
கைகளாற் றலைமேன்மோதிக் கதறியுண் ணைந்துநைந்து

௰௭

தகப்பனுக்கிருக்கும் பாக்கியத்தையுந் தனக்கிருக்குஞ்
சகத்திலில்லாத நிர்ப்பாக்கியத்தையுந் தானேயுன்னித்
திகைப்படையாமற்றேடிச் செல்லுவேனெனத்துணிந்து
சுகப்படச் செய்யுந்தந்தை சுகித்திடுமிடத்திற் சென்றான்

௰௮

செல்லும்போதவன்வரத்தைத் தெரிந்தவன்பிதாமுன்னோடி
நல்லவனீயென்பிள்ளாய் நம்மிடம் வந்தாயென்று
புல்லியே முத்தமிட்டான் புத்திதேர் மகனைப் பெற்றா
லெல்லவருக்கும் பூரிப்பிருப்பதே யியற்கையன்றோ

௰௯

பிள்ளைதன் பிதாவைநோக்கிப் பெற்றவென்றகப்பனேயான்
றள்ளொணாப்பாரத்தினுக்குந் தகப்பனாமுனக்குமுன்பு
மெள்ளிடும்பாவஞ்செய்தேனி னியுன்றன்மகனாவென்னைக்
கொள்ளப்பாத்திரனேயல்ல னென்றனன் குணப்பட்டோனே

௨௰

தந்தைதன் வேலைக்காரர் தம்மைக்கூய் நீவிரென்றன்
மைந்தனுக்குயர்ந்த பீதாம் பரங்களு மாணிக்கத்தைக்
குந்தனஞ்செய்த மோதிரங்களுங் குடைமுன்னான
வந்தமில் பூடணங்களாசையோ டளிமினென்றும்

௨௧

அறுசுவையாகும் போசனப் பொருளப்பஞ் செந்தே
னறுநெய்பால் பழவர்க்கங்களுடியே கொணர் மினுண்டு
பெறலருமகிழ்வு கொள்வோம் பிள்ளை முன்னிறந்து போனான்
மறுபிறப்படைந்துவந்தான் வாழ்வுணல் வாழ்வீதென்றான்

௨௨

சாற்றுமித்தன்மைபோலத் தனித்தவோர் பாவியைக்கண்
டேற்றிடத் தக்கதாக விவனுக்கோரேரி நிற்குஞ்
சேற்றினீர் தேற்றினாலே தெளிவிப்பான்போல ஞானந்
தோற்றிடச் செய்துதேவ தேவனைத்தொழச்செய்வித்தல்

௨௩

சீர்தரும் பரலோகத்திற் றேவதூதருக்குமுன்னா
நேரிற்கொண்டாடப்பட்டு நிலைத்தவானந்தந் தன்னைச்
சேர்வுறும் படிக்காமுன்னர் செப்புமூவகைப் பட்டோர்க்குங்
காரிருள் விளக்கையன்றிக் கலையுமோ வென்றாரையர்.

---

## இலாசரு சருக்கம்.

௧

பாக்கிய நிறைந்தவன் பருத்ததோளினன்
றேக்கிய வழகினன் செழித்த வீட்டின
னாக்கினுக்கின் பொருணாடுஞ்சிந்தையான்
போக்கிய மொன்றையே பொருளெனக் கொள்வான்

௨

பொன்மணியணிகளைப் பூணுறுப்பினா
னன்மைசெய்பவரை நாடாத கண்ணினான்
றன்மனப்படியெல்லாஞ் செய்யுந் தன்மையான்
றொன்மைநூற் கேட்டிடாத் தொளைகொள்காதினான்

௩

பராபரனைத் தொழாப் பாவ நெஞ்சினான்
றுராகிருதங்களே தோன்றுந்தாயவ
னாகிருத மொன்றேயன்றி நன்மைக
ளிராதவனொருவனிங்கிருந்து வாழ்ந்தனன்

௪

வாழுநாட்டன்னிலே வாய்மையொன்றைத்தான்
சூழுவோன் றேவதேவனைத் தொழுபவன்
பீழைசெய்பருக்க ளேபிறந்த மெய்யின
னேழையனிலாசரு வென்னும் பேரினன்

௫

இருந்தனனொருவனிவ் வேழையோனந்தப்
பெருந்தனத்தோனுண்டபின்னர் வீழ்ந்திடுந்
திருந்தியவுணவினைத் தினமுமுன்றிலி
னருந்திடுவானங்க ணமர்ந்திருப்பனே

௬

பாவத்தினாலிப் பருஉக்கள் வந்தியா
னோவுறச்செய்வதை நுகர்ந்திடாவிடிற்
றேவனுக்கெப்படி சித்தம் வந்திடு
மாவதாம் படிக் கனுபவித்தனன்றென

எ

எண்ணியே யிருந்தன னிருக்கு நாளினாய்
நண்ணிவந்தவனது பருவை நக்கிடப்
புண்ணில்வேற் படைபட்டாற்போற் றுடித்தவன்
மண்ணிடைவீழ்ந்து வாயாரக்கத்துவான்

அ

ஈதுபோற் றுயரங்களெண்ணிலாதவை
பூதலத்தடைந்தவன்றேவ புண்ணிய
சாதனத்தாற் புவிவிட்டுத் தான்றெய்வ
தூதராற் றேவலோகத்தைத் துன்னியே

கூ

மண்ணினிற்றேவனை வணங்கினோர் தெய்வ
புண்ணியபலத்தினாற் போந்தமர்ந்திடுந்
தண்ணிழலாபிரகாமடித்தல
நண்ணினனிலாசருவென்னு நன்மையான்

௰

ஆங்கவனாறுதல்செய்ய வாறியே
யோங்குமானந்தத்தை யுண்டிருப்பவர்
பாங்கையும் பராபரன் மகிமைப் பண்பையு
நீங்கலாமகிழ்வுட னினைந்து வாழ்ந்தனன்

௰க

வேறு.

பாவியாயுலகபோக மொன்றையே பரிந்திருந்தோன்
சாவினையடைந்தான் பாவியாவருஞ் சார்ந்திருந்து
வேவுறு நரகில்வீழ்ந்தான் வேதனைப் பட்டான் றுன்பம்
யாவுமேவந்தபின்பென் செய்குவானிவன்றனம்ம

௰உ

அஞ்சுவானலறுவான் வீழ்ந்தழுங்குவானந்தோவென்பா
னெஞ்சின்முன் செய்தவெல்லா நினைந்துநைந்தழுவான்பாவ
மிஞ்சினாலிந்தத்துன்ப மேவுமென்றுணர்ந்தாற் றேவன் [பான்
செஞ்சொல் வேதத்தை நம்பிச் செய்வதைச் செய்வேனென்

௰ங

இவ்விதம் புலம்பிக் கண்ணை யெறெடுத்தான் றூரத்தி
லொவ்விலாபிரகாமூரிலூறு மிலாசருவைக் கண்டான்
செவ்வைசெய் தகப்பனே நீர் சிந்தைவைத் தெனக்கிரங்கி
யவ்விலாசருவைக் கையங்குலி நுனியாற் றண்ணீரை

௰ச

தீண்டியென்னா வில்விட்டுச் சிலிர்ப்புறச் செயவனுப்ப
வேண்டுமிந்நெருப்பினால் வேதனைப்படுகின்றேனேயென்
றீண்டவன் கூவினா பிரகாமுமிருந்து பூவி
லாண்டனையுனக்கா மின்பமனைத்தையு மகனே நீதான்

௰௫

ஆசையாய்ப் பாவத்துன்பமனைத்தையு மனுபவித்தி
லாசருவொழித்து விட்டானிலகுவில் போகந்துய்த்த
போசனப்பிரியோ மெல்லாம் புந்தியினினைத்துக்கொள்ளு
நாசநீ யடைந்தாயின்பி லாசருநண்ணினனே

௰௬

அன்றியுநும்பானின் றிங்கணையவு மெம்பானின்று
சென்றிடுதற்குமாங்கேசிந்திப்போர்க் கிடையூறாக
வொன்றியபிளப்புண்டாக்கப் பட்டிருகின்றதென்று
னன்றதுவேற்றகப்ப நான் வேண்டலொன்றுண்டென்றே

௰௭

பாதாளமுற்றபாவி பகருவானைந்துபேரென்
சோதரரவர்களென் போற்றுயருறும் படிக்கே யிந்த
வேதனைப்படுத்திடத்தின் மேவிடாவண்ணமென்றன்
றந்தைவீட்டினுக்குச் சாட்சியாயிலாசருவைப் போக

௰௮

சொற்றிடவேண்டுமென்றான் றூயவாபிரகா நோக்கி
மற்றவருக்குமோசேயுந் தீர்க்கதரிசிமாரு
முற்றனரவர் சொற்கேட்பா ரென்றுரைத் திட்டான் பின்னு
சிற்றின்பம் பெரிதென்றெண்ணித் தீரகிருப்பான் சொல்வா

௰௯

முன்னொருவன் பள்ளத்தின் மோதுறவீழ்ந்தானெனனல்
பின்வருபவர்கள் சேட்டல் பெரிய தீவைத்தியாகு
மன்னதுபோன் மரித்தோரினிலிருந்தவர்முன் சென்று
னன்மனமுடையாராவ ரென்றனனவில்வான் மேலோன்

௨௰

கண்ணில்லாக்குருட்டனுக்குக் கங்குலும் பகலுமொன்றாம்
வண்ணம்போன் மோசேதீர்க்கதரிசிகள் வாய்ச்சொற்கேளா
வெண்ணத்தோராகில் விண்ணின்றிறங்கிறேனெனினுங்கேள
தண்ணிரை விழற்கிறைத்தாற் றருபலனுண்டோவென்றான்.

---

## குஷ்டரோகர் குணப்பட்ட சருக்கம்.

௧

எருசலே நகர நண்ண வேகுங்காற் கிறிஸ்து நாத
ரிருபுறத்தினுஞ் சமாரியா கலிலேயா வென்றே
மருவுறவாங் கோரூருள் வந்தனர் வருதல் கண்டே
பெருகிய குட்டரோகம் பெற்றவோர் பத்து மாந்தர்

௨

தூரமாய் நின்றியார்க்குந் துயரறுத் தாளுவோரை
நேரிலி யேசுநாதரென்று கூய்நீரே யெங்கள்
பேரிலே யிரங்க வேண்டுமென்றனர் பிரார்த்தித்தார்கள்
சீருற நினைத்த மாத்திரத்திலே செய்ய வல்லார்

௩

நீவிர்போய் நும்மை யாசாரியர் நோக்கநின்மி னென்றார்
தேவர் சொற்படியே செல்லும் போதினிற்றேகசுத்த
மேவினாரவர்கட்குள்ளே மெய்யினை யொருத்தன் கண்டு
போவுறுமனத்தோடீண்டே புகுந்து வாய் திறந்தொலித்து

௪

தேவ தேவனை யன்போடுஞ் சிந்தித்து மகிமை செய்தே
யாவலோடையர் பாதத்தருகுற வணங்கி யாங்கு
நாவினாற் றோத்திரித்தா னைதரச் சமாரியானை
நோவினைப்பதின்மரன்றோ நாறினரொன்பான் பேரும்

௫

பிதாவைத் தோத்திரிப்பா னெய்தப் பெற்றிடார் கொல்லோ
குதூகலத்தவ வெழுந்துபோவுனுட்கொண்டவன்பே [வென்று
சதாவுனைக் காக்குமென்றார் சார்ந்தவர்க் கருளளித்தற்
குதாரர் செங்கரத்தாற் றீண்டவுன்னித்தம் மகவெடுக்கி

௬

அனந்தம் பேரையர் பாலினடைந்தன ரவர் கடம்மைச்
சினந்திட்டார் சீடரையர் சேய்களைக் கொணரச் செய்து
மனந்தனுனுந் தடுத்தன் மாற்றிடுவீரே னென்னிற்
கனந்தரும் பராபரன் றன்கருணை செய்யி ராச்சியந்தான்

௭

அப்படிக்கொத்தோர் தங்களுடையதா மெவனானாலு
மொப்பமை குழந்தையைப் போலுற்றேற்றுக் கொள்ளானாகிற்
செப்பிடற் கருமதற்குட் சென்றிடா னென்றார் சேய்கட்
கப்பராங் கிறிஸ்துநாத ராசி செய்தருளினாரால்.

---

## வேற்றுருவடைந்த சருக்கம்.

௧

கிறிஸ்து நாயகர் பிலிப்பெனக் கிளத்துவோன்
முறைக்கமர் செசாரியா மொழி கொணுடுறுங்
குறிப்படு திசை யிடைக் கூடிச் சீடர்க
ளுறத் தொடர்ந் தேவரவுய்த்து வந்தனர்

௨

வந்த போதினிற் றஞ்சீடர்களைமானிட
மைந்தனாகிய வெனை மனிதர் யாவனாய்ச்
சிந்தை செய் துரைக்கின்றார் செப்புவீரென்றே
யந்தரங்கத் துண்மை யறியக் கேட்டனர்

௩

அதற்கவர்களும் யோவானையஸ் நாநக
னிதற்குச் சந்தேகமி லென்கின்றார் சிலர்
கதிப் பெலீயா வெனக் கரைகின்றார் சிலர்
முதிர்ப்பெரேமியாவென மொழிகின்றார் சிலர்

௪

அல்லது தீர்க்கதரிசிகளாகிய
நல்லருளொருவராய் நவில்கின்றார் சிலர்
சொல்லரு மகிமை சேர் தூயரேயுமை
யெல்லவருஞ் சொல்வதிவ்வித மென்றார்

௫

நீவிர்தானென்னை யென்னிகழ்த்துதற்குங்க
ளாவெழுமென்று நாயகர் வினவினா
ராவலார் சீமோன் பேதுரு வறைவனீர்
சீவனாம் பராபரன் சேய்க் கிறிஸ்தென்றான்

௬

ஊக்கச் சொற் கேட்டையர் யோனாமைந்த நீ
பாக்கியவானுன்னாற் பகர்ந்த தன்றிதை
மோக்கமா ரென் பிதா மொழியச் செய்தன
ராக்குவதி யானா நிற்கிறைவன் கேளெனா

௭

பேதுருவா யிருக்கின்றை நீ பெரி
தோது மிக்கல்லின்மே லென்னொரேசபை
நீதியாய்க் கட்டுவே னிரைய முன்றில்கள்
யாதுமேயதனை மேற்கொள வேலாதென்றார்

௮

அதுமுத லியேசுதாமெருசலே மண்ணி
முதியவர் வேதபாரகர் முன்னோர்களால்
வதைமிகவே பட்டுச் சிலுவைவாய் மரித்
தொருவுமூன்றாந்தின முயிர்த்தெழுந்திட

௯

வேண்டியவதனைத் தஞ்சீடர் மெய்ம்மையாற்
காண்டிடக் காட்டத் துவக்கினா ரக்கா
லாண்டவரவரைப் பேதுரு வதட்டியே
மாண்டல் வேண்டா நும்மேலிரக்கம் வைத்திரும்.

௰

என்னவே கிறிஸ்தவற் றிரும்பிப் பார்த்தென்றன்
பின்னர் போசாத்தனே பேரிடறலாய்
மன்னினா யெனக் கென்னோவென்னில் வான்பிதா
வுன்னத்திற் கடுத்ததை யுரைத்தை யல்லை நீ

௰௧

மனிதருக் கடுத்ததை மனங்கொண்டே சொனா
யினியதன்றென்றி யேசுவுந் தஞ்சீடர்பா
லெனை யெவனேனும் பின்றொடர வெண்ணினாற்
றனையே தான் வெறுத்துத் தன் சிலுவை தாங்கியே

௬௨

வரக கட்வான தேமெனன்னில வைபசப்
பெருக்கத்தை நம்பியே பேணிச் சிவனை
யிரட்சிக்க வேண்டுமோ னிழப்பனே யதை
யுரித்துறு மாத்துமச் சேதமுற்றிடில்

௬௩

அவனுக்கிலாப மென்றொரு மன்றியும்
புவன மாணிடன் றன்னாத்துமத்தைப் பொன்றனின்
றெவணமாய் மீட்பன் மீட்டிட வென்ளீகுவன்
றவயினாற் போனதேதானென் றோதினார்.

௬௪

இப்படிக்காறு நாளேகிய பின்ன
ரொப்பிலார் பேதுரு யோவான் யாகொபு
குப்பலா ரிவர்களைக் கூட்டிக்கொண்டுத
னிப்புற வுயர் பருப்பதத்தின் மேனிலம்

௬௫

மருவவே யழைத்துப் போய் வந்தவர் முன் வேற்
றுருவ மாயினார் கிறிஸ்துலக நாயக
ரருமவர் வத்திரமருக்கன் போலவுந்
திருவத்திரங்களோ தேசுபோலவும்

௬௬

செம்மையாய் வெண்மையாய்த் திகழ்வ வாயின
வம்மவக்கணத்தின் மோக்கத்தி னின்றங்கே
தம்முனான் மோசே யெலீயாதாம் வந்தார்
மும்மையோர்களுந் தரிசித்து முன்னின்றார்

௬௭

எருசலேமினி னிறைவேற்றப் போகின்ற
வொருவர் செய்கையை யுற்ற விருவர் மூவர்பா
லுரை செய்தார் கேட்டுப் பேதுரு வொருவர்க் கூய்க்
குருவெ நாமிங் குறனலனுங் கொள்கையேல்

௬௮

மூன்று கூடாரங்கண் மொய் பெறச் செய்வோ
மான்ற வொன்றுமக்கு மோசேக்கொன்றா மிங்கே
தோன்றெலீயாக் கொன்றா மென்று சொல்லுங்கா
லூன்றிய வொளி மயமுள்ள மேகந்தான்

௬௯

நீழலையவர்கண் மேனிறைத்த தன்றியும்
பாழியாரதி னின்றோர் சத்தம் பட்டிதோ
சூழிவனாம் பிரியந்துன்கின்ற நம்
வீழ்தல்சேர் குமாரனாய் மேவுகின்றனன்.

௨௰

இவன் மொழிகேளுமி னென்றதாலதைச்
செவியுறக் கேட்டலுஞ் சீடர் தம்முகங்
கவிழவே குப்புற்றுக் கலங்கி வீழ்ந்தனர்
நவையிலி யேசுவு நணுகி வந்தரோ.

௨௧

தொட்டவர்களை யெழுந்திருங்க டோயச்சம்
விட்டிடுமின்க ளென்றனர் விழித்துப்பார்த்
திட்டபோதி யேசுவையன்றி யாருங்கண்
பட்டிடக் காண்கிலர் பருப்பதம் விட்டே.

௨௨

இறங்கும்போதி யேசவர்களுக் கிப்பூமியிற்
சிறந்த மானிட மகன் செத்துச் சாவினைத்
துறந் தெழுமட்டு மித்தோற்றம் யாவர்க்கு
மறைந்திடன் மறவுமி னென்றறிவித்தார்.

---

## எருசலேஞ் சென்ற சருக்கம்.

௧

யூதேயா கலிலேயா சமாரியாவெனப் பெயர் கொண்டுயர் மூன்நாடும்
பூதலத்தோர்க்குறு பாவமன்னிப்புப் புரிய வந்த புகழ்க் கிறிஸ்து
பாதமதாற் சஞ்சரிக்கப்படு மேன்மைப்பட்டனவாம் பகரவைக்குண்
மேதினிக்கோர் தலையாக யூதேயா நாடொன்றும் விளங்குமாதோ

௨

அத்தலைக்கோர் முடியென்ன மலைமேலே யழகமைய வமர்ந்ததாயெச்
சத்துருவு மஞ்சும் வண்ணஞ் சுற்று பெரும் பிலமுளதாய்ச் சாற்றதைத்
[தான்
பொத்தி வளைந்திருக்கு நெடுமலையுளதாய்ப் புரிகளுக்கோரரசா யாருஞ்
சித்தமகிழ்வுற நோக்கு மெருசலேந் திருநகரஞ் சிறந்ததாமால்

௩

முன்னொருகாற் பராபரன்றன் றிருவாக்காற் றனையெடுத்து மொழியட்
டுன்னதமார் தீர்க்கதரிசிகள் வாசஞ் செய்யு முயர்வுற்றதத்தேம்[பெற்ற
மன்னவ னெரோதே யரண்மனையாஞ் சீயோன்றன்கண் வாழுமுற்ற
தொன்னலார் செய்யழிவை யழித்தழித் தோங்கிய வெற்றிதுற்றதாமே

௪

நிதானமயமா யகன்றதாய் நெடியதா யாராதனை நிலைச்சந்
நிதானமுளதாய்ப் புலவர் பலநாளு நிலவலய நடுவாய் நிற்க
நிதானஞ்செய் தேயமைத்ததாய தேவாலயமந் நீண்முடிக்கோர்
நிதானத்தாலே யமைந்த வுச்சியெனை விச்சகத்தி னிலவுமன்றே

௫

இன்னதாகிய தன்மைத்தா மெருசலே மருகிலெய்தி யேசு
பன்னிரு சீடர்களுடனே யொலிவ மலைக்கருகு பெத்பகேய்க்குட்பட்டுத்
துன்னியபோதி யேசிரண்டு சீடர்களைக் கூயெதிரே தோன்றுமூரின
முன்னரே நீவிர் போமின்களங்கே கட்டுண்ட மூரிக்கோகும்

௬

அதனுடனோர் குட்டியுமே யிருக்கக் காண்பீரவையை யவிழ்த்துக் கொ [ண்டே
யெதுவேனு மெவனொருவன் கேட்கி லாண்டவருக்கு வேண்டுமென்மி
னிதமுடனே யனுப்புவானென்னிடங் கொண்டடையுமென்றுரைத்தா
முதலிலோர் தீர்க்கதரிசியினாலே மொழிந்தபடி முடிவதாமால்

௭

மொழியென்னவென்னி லுன்னிராசா சாந்தக்குணராய் முதியதாமோர்
கழுதைமேலுங் கழுதைக் குட்டிமேலுமே யேறிக் கதிநடத்தி
விழியுற நின்பால் வருவாரெனச் சீயோன் மகட்கு விளம்பிடுமினென்ன
வெழுதி யிருக்கின்றதுதான் கிறிஸ்து தமக்கியம்பிய வாறெய்திச்சீடர்

௮

கொண்டுவந் தவைமேற் றம்மாதனமிட் டவரேற்றங் கொள்ளச்செய்
மண்டியபல்லோராடை வழியில்விரித்துபசரித்தார் மரங்கண்மேய [த்தார்
தண்டளிர்களைப் பரப்பினார்சண் முன்பின் செல்பவர் தாவீதின் மைந்தர்க்
குண்டுபடக் கடவது மங்களமென்ன வோசன்னா வென்றுரைத்தே

௯

கர்த்தர் நாமத்தில் வருகிறவர் தோத்திரஞ்செய் கனம்பட்டாருன்ன
தத்திலே யோசன்னாவென்றே சாற்றிட்டார்கள் சாற்றக் கேட்ட
மொய்த்திடுங் கும்பலிலிருந்த பரிசேயர் சிலரையர் முன்னரேவந்
தொத்த போதகரே நுஞ் சீடர்களை யதட்டுமென்று ருளச்செருக்கால்

௰

சொல்லியதற் கையர் விடைமனிதரிவரே மௌனந்தோய்வாராகுற்
கல்லுகள் பேசத் துவக்குமென் றுமக்குக் கரைகுவேனெனக் கரைந்து
செல்லுமந்தப் பாவவிருசக் கிறிஸ்தவ் வெருசலேங் கிட்டிச் செய்தே
யல்லலோடதைக் குறித்தேயழுது நீ யிந்த வுன்னுளினிலாகிலும்

௰௧

உன் சமாதானத்துக் கானவைகளை யுணர்வுற்று யேனன்று
நின்கண்கட்கிப்போது மறைவாய் நிற்கின்றன வந்நிமித்தங்கேணீ
யென் சந்திப்பின் காலமறியாமற் போனவிதுதா னுன்மாற்றுன்
றன் சிந்தைப்படி யுன்னைச் சூழ்ந்து காவற்கடக்கித் தகப்பிடித்து

௰௨

உன்னையு முன்னிடம்வைகுன் பிள்ளைகளையுந் தரையாவொழித்துப்போ
மன்னிய வுன்னிடங் கல்லின்மேற் கல்லைவைக்காது மழுப்புநாட்க [ட்டு
டுன்னியிடுநின்பாலென்றே வகுத்துச் சொல்லிவிட்டுத் தூயயேசு
மன்னகர்க்குட் போகும்போ திவராரென் றவ்வூரா ரதிசயித்தே

௰௩

இவர் கலிலேயாதேய நாசரேத்தூர ரியேசுப் பேரிட்டு
நுவலவருமொரு தீர்க்கதரிசியா நூதனரென்றார்களைய [ர்த்
ருவமையிலாப் பராபரன் றேவாலயத்துட் போயனைத்து மூலவியேபா
தவணிருந்து வர்த்தகஞ் செய்பவரையுங் கொள்பவரையு மப்பாலகற்றி

௰௪

என்னுடைய வீடு சபவீடென்னப்படுமென்றே யெழுத்திருக்க
வின்னதை நீர்கள்ளர் குகையாக்கினீரென் றுரைத்தா ரிருக்கும்போதுப்
பின்னமிகுஞ் சப்பாணி குருடர்களாலயத்தில் வந்தார் பெருமையுற்றோ
ரன்னவர்க்குக் குணப்படுத்தினாரவர் செய்யற்புதங்களனைத்தும் பார்த்
[தும்

௰௫

மழலைமொழிச் சிறுவர் தாவீதின் மகர்க்கோசன்னாவழங்கக் கேட்டும்
விழிகள் சிவந்துப் பிரதானாசாரி வேதபாரகர் தாம வந்து [காட்டிச்
மொழியுமிதைக் கேட்டுக் கொண்டிருக்கின்றீரோ வென்றார் முனிவைக்
செழியபெருங் கருணையாராங் கேட்கிறேனென்றுஞ் செப்புகின்றார்

௰௬

பாலகர் தம்வாயாலுந் துதியுண்டாகும்படிக்குப் பண்ணுவீரென்
றேலவே யெழுதியிருக்கின்ற நூலினை நீங்களெடுத்துப் பார்த்தோர்
காலத்தும் படித்திருக்கமாட்டீரோ வென்றுரைத்துக் கங்குற்போக்க
மாலை நேரத்திற் பெத்தானியா வெனுநகரம் வந்து சேர்ந்தார்.

---

## அடக்கப்பட்ட விலாசரு வெழுந்த சருக்கம்.

க

முன்னொருகாற் கிறிஸ்து விருகாற் குபசாரஞ் செயத்தன் மொய்த்த
றன்னினறுந் தைலப் பூச்சிட்டதனாற்றடவு மரியாளு மார்த்தா [கூந்த
ளென்னுமவள் சோதரியுஞ் சோதரனி லாசருவு மிருந்து வாழ்ந்தார்
நன்னகர் பெத்தானியாவி னிலவ்விலாசரு நோய் நண்ணினனே

உ

அவனுனு நேசித்த கிறிஸ்துவினுக்கீதுரையாளனுப்பினார்கள்
செவிகொடுத்த வேசிங்நோய் மரணஞ்செய்வதற்காகச் செறிந்ததன்று
முவமையிலாத் தேவன் மகிமையை விளக்குமேதுவிற் காமுற்றவீதாற்
புவியினில் வந்தமர் தேவபுத்திரரு மகிமையினைப் புணர்வாரென்றார்

௩

மார்த்தாண்முன் மூவரிடத்தன்பிருந்தும் வைகுமிடத்திரண்டுவைகல்
சேர்த்திருந்தார் திரும்பவுநாம் யூதேயாக்குச் செல்வோஞ் சென்மினெ
பார்த்துரைத்தார் சீடர்களையவர்களிரபீ யூதர் பழுதிலும்மை [ன்று
வேர்த்துக் கல்லாலெறியத் தேடியவிப்பொழுதே நீர் மேவலாமோ

௪

என்னவியேசுவுங்கர்த்தரருளொளியுண்டென்பதனுக்கென்வெளிச்சந்
தன்னினடப்பவனவனே யிடறுபடா னென்றுரைத்தார் தஞ்சினேக
முன்னியவிலாசருநித்திரையடைந்தானெழுப்பவங்கனுறுமேவனென்று
ரன்னவர் கணித்திரையாற் சுகமடைவானென்றார் சொல்லருந்தந்தே
[மார்

௫

அப்பொழுதிலாசருதான் மரித்தானென்றுரைத்து நானங்கிலாம
விப்படியே யிருந்ததனாலுங்கள் விசுவசிப்புக்கேதுவாகுந்
தப்பறுநுங்கிமித்த முவக்கின்றே நாமெல்லோருஞ் சார்வோம்வம்மின்
குப்பலொடுமென்றுரைத்தார் கிறிஸ்துவங்கே திதிமுவெனக்கொண்ட
[பேரோன்

௬

ஆயதோமா மற்றச் சீடர்களை நோக்கியவரோடுகூட
மாயவே யூதர்களாற் போவோம் வாருங்களென்றான் வந்த காலை
நாயகரிலாசரு கல்லறைப் பட்டு நாலுநாளென லறிந்தார்
போயபெத்தானியா வெருசலே நகர்க்கருகாம் புரியிலொன்றாம்

௭

யூதர்களிற் சிலர் மார்த்தாண் மரியாட் காறுதலுரைக்க வுற்றிருந்தார்
நாதர் வருவதைக்கேட்ட மார்த்தாள் போயெதிர்கொண்டு நாதரேயென்
சோதரனீரிங்கிருந்தான் மரிக்கானேயிப்பொழுதுந் தூயதேவ
ரோதிநீர்கேட்பதெதுவோவதுதந்தருள்வாரென்றுணர்வேனென்றாள்

௮

உனது சகோதரனுயிர்பெற் றெழுவானென்றேசுசொல வுயிர்த்தெழு
[ம்புந்
தினமெனுந்தீர்ப்புறுநாளி லெழுவனெனவறிவனென்றாடேவமைந்தர்
வினவுற வந்தவனானே யுயிர்த்தெழலுஞ் சீவனுமாய் மேவுகின்றே
னென்னை விசுவசிக்கிறவ னிறந்தாலும் பிழைப்ப னிறவாதிருந்தே

௯

என்னை விசுவசித்திருக்குமெவனுமென்றென்றைக்குமிறக்கானிற்பான்
சொன்னவிதை விசுவசிக்கின்றனையோ வென்றாரவளுந் தூயரே நீர்
பின்னுலகில் வருகுவாரென்று பேசிடப் பெற்ற கிறிஸ்துவென்று
நன்னயமாய் விசுவசிக்கிறேனென்று நடந்தனள் வீடடைவானண்ணி

௰

அந்தரங்கமாய் மரியாளிடங் குரு வந்தாருன்னை யழைத்தாரென்று
ளிந்தமொழி கேட்டவளுங் கிறிஸ்துவமரிடந் தேடி யெய்தினாள்பின்
வந்தனரங்கிருந்த யூதர்கண் மரியாள் கல்லறை வாயழ வெய்தாளென்
சிந்தையராய் மரியாளையரைக் கண்டவுட னடியிற் றேம்பி வீழ்ந்தாள்

௰௧

என்றன் சோதரன் மரித்தானீரிங்கிலாததினா லென்றே யேங்கி
நின்றழுதா ருடனின்ற யூதரழுதார்கணோர் கண்ட தேவர்
தன்றனாவியிற் கலங்கித் துயரடைந்து கண்ணினீர் ததும்பி யெங்கே
பொன்றினவன்றனை வைத்தீரென வவர்கள் போய்ப் பாருமென்றார்
[பின்னும்

௰௨

நேசித்தாரிவரவனை யெவ்வளவா யென்றார்க ணின்ற சில்லோர்
மாசுடைய குருடனுக்கு மாசிலாக் கண்ணளித்த மகிமையுள்ள
வீசரிவரிவனைச் சாகாதிருக்கச் செய்யவியலாதா வென்றா
ரேசு மறுபடியுந் தம்முட் கலங்கிக் கல்லறையினிடத்தே வந்தார்

௰௩

கல்லறையாங் குகைமேல் வைத்திருக்குமொரு கல்லை யெடுத்திடுமி
[னென்றா
ரல்லலுறு மார்த்தா ணானாளானதா ணாற்றமாமே யென்றாள் [ன்முன்
வல்லவர் நீ விசுவசித்தாற் றேவன் மகிமையைக் காண்பாயென்று நா
சொல்லவில்லையாவென்றாரக்கல்லை யெடுத்துவிட்டுச் சூழ்ந்து நின்றார்.

௰௪

ஏசுநாயகர் தமது கண்களைமேலெடுத்துப் பிதாவேயென்ற
னாசைகொளச்செவிகொடுத்தபடியினாலும்மைத் தோத்திரிக்கிறேனீ
ராசையாய்ச் செவிகொடுக்கிறீ ரென்றே யறிந்திருக்கிறேனானாலு
நேசமுடனீ ரென்னையனுப்பினதைச் சூழ்ந்துகொண்டு நிற்குமாந்தர்

௰௫

விசுவசிக்கும்படியாக வவர்கணிமித்த மிதனை விளம்பினேனென்
றசைவற நின்றொரு நொடியிலாண்டவனார் மாண்டவனை யருமைவாயா
லிசைகொளக்கூவி லாசருவே வெளியே வாவென்று ரைத்தாரிறந்தான்
[வந்தான்
விசைய மகிமைகளிவரை யெதிர்பார்க்கு மிவர்க்கிஃதோர் வியப்போ
[வம்மா

௰௬

இறந்தவனே திரும்பி வந்தானென்பதனுக்கடையாளமாயிருக்கும்
பிறந்தவர்களே சத்தாற் சிறந்தவர்களிவன் மரித்தபின் பிரேதந்
திறந்திராவண்ண முகஞ்சுற்றிய சீலையுங் கைகால்களிலே சீலை
தறிந்ததனாற் கட்டிய கட்டையுங் கண்டாரதிசயித்தார் தரணிமாந்தர்

௰௭

இக்கட்டையவிழ்மி னென்றார் மரணக் கட்டவிழ்த்து விட்டவேசுநாத
ரக்கணமே யவிழ்த்தெறிந் தாச்சரிய மாச்சரியமென வங்கிருந்தோர்
திக்கெட்டும்பரவி நின்றுதத்தமக்குட் சிந்திப்பார் தேறார் சொல்லும்
பக்குவமு நமக்குண்டோ வென்பாரையரைப் பார்ப்பார் பார்த்துவப்பார்

௰௮

நாலுநாளாயுயிரை விட்டுடலங் கல்லறையுணவிந்து மிந்தச் [பின்
சிலரால் விழித்துவந்தான் கண்டதாற் செழித்துவந்தோருஞ் செய்யுமன்
பாலதொன்றாயினுஞ் செய்யுமிடங்களாற்பலன் வேறுபடுதல்கண்டோருஞ்
சாலவீ லாசருக்கு நம்மாலென்னபலன் பலனிலன்பைச் சார்ந்தோமெ
[ன்பார்

௰௯

அன்புசெய்தாலித் தகையோர்க்கன்பு செயவேண்டுமென வறிந்தோ
[மென்பார்
அன்பிவரை யல்லாமற் செய்யுமன்பாலாம் பலனுண்டாமோ வென்பார்
அன்பதனால் வருபலனையறிந்து மினியன்பிலராயாகோ மென்பார்
அன்புசெய்வார்க் கன்பராய்க்கிறிஸ்துவையல்லா தருள்வாராரே யென்
[பார்

௨௰

மானிடப் புத்திரராகுந் தேவரிவரோ வென்பார் மார்த்தாண் மட்டுந்
தானறிந்தாளோ வென்பார் மரியாளெவ்விதத்தாற்றானறிந்தாளென்பார்
போன மனிதனையுமழைத்திட முடியாதிவர் புதுமை புதுமை யென்பா
ரான மனிதர்களிலனேகம் பேர்களையரிடத்தன்புவைத்தார்

௨௧

அங்கிருந்த யூதர்களிற்சிலர்கள் பரிசேயரிடமடைந்தியேசு
பொங்குமகிமைகளை யுரைத்தார்களவர்களுக்குள்ளம் புழுங்கிக் கூடிச்
சங்கமதை வரச்செய்து நாமென்னசெய்கிறதினியன்றானே
யெங்கெங்கு மற்புதங்கள் செய்கின்றானிவனை விட்டுவிட்டோமானால்

௨௨

எல்லவருமிவனையே விசுவாசித்தரசனாவெடுப்பாரன்றே
மல்லெழும்பி ரோமர் வந்து நமதிடநம்மவரையெல்லாம் வாதிப்பார்க
ளல்லவாவெனவவருளவ்வருடப் பிரதானாசரியனென்றே
சொல்லுங் காய்பாவென்போனவர்களைப் பார்த்துமக்கொன்றுந்தோன்
[றாதென்றே

௨௩

தன்னறிவாற்சொல்வதாய் மனிதரெலாங் கெடுதிபடாத்தன்மையாகச்
சொன்ன வொரே மனிதன் மரிப்பது நமக்கு நலமெனநீர் சூழ்கிலீரே
யென்னவுரைத்தனனிந்தமொழியை யவன் சுயமாகவியம்பிடாம
லன்னவருடப் பிரதானாசாரியாகையினாலறைந்தானான்

௨௪

யூத சனங்கட்காகவே யேசு மரிப்பினையேயுறுவாரென்று
மோதவருக்கன்றியும் வையகமெங்குஞ் சிதறுபட்டவொன்றாந்தேவ
நாதனது பிள்ளைகளை யொன்றாகச் சேர்ப்பதற்கு நசிப்பாரென்றும்
போதமுறுந் தீர்க்கதரிசனமாயிற்றன்னவன் சொல் பொய்யுறாமல்

௨௫

அந்நாண் முன்னைகவேசுவைக் கொலைசெய்வானவர்களாலோசித்தார்
பன்னரிய மகிமையுளவேசுயூகர்கள் கண்ணுற் பாராவண்ணந்
துன்னுமிடமாயவெப்பிராயீமென்றிடுபெயராற்றோன்றும் பேரூர்
தன்னிற்றஞ் சீடருடனே கூடத் தங்கினார் சஞ்சரித்தார்.

---

## கடைசி நாளிற் கிறிஸ்து வருவாரென்ற சருக்கம்

௧

மரணமோ கொளுந் – தருண வெள்ளிநாள்
புரண மேவுமுன் – கருணை யேசுதான்

௨

ஞாயிறென்னுநா – ளாயகாலையிற்
கோயிறன்னிலே – போய் நுழைந்தனர்

௩

இரவிலங்கிரா – தொருவியே புற
மருவி மெய்ப்பரா – பரனை யோதுவார்

௪

ஆறு நாட்பகற் – கூறுமுற்றுமங்
கேறெருசலேந் – தேறிநாலெலாம்

௫

தேவ தேவனுக் – காலயாவையும்
மேவுவார்க்கெலாங் – கூவியே சொல்வார்

௬

கடைசி நாட் புவிப் – படுகுறிப்பெலா
மடைவுடன் சொலித் – திடமுறுத்துவார்

௭

திருமியே வரும் – பெருமை தன்னையுந்
தெரியும வண்ணமா – யுரைசெய்வாரரோ

வேறு

௮

ஏன்ற செவ்வா யெனுந் தினம் – மூன்றுநாளின் மொழிகின்
தோன்றிடுங் குறியின் றொகை – யூன்றியார்க்குமுணர்வுற [றுர்

௯

அந்தகாரம் பட்டாதவன் – சந்திரன் றன்னொளிகெடுஞ்
சிந்தவேயுடுவின்றிர – ணந்தும் வானங்களின்னலம்

௰

இக்குவலயத்தெய்திவாழ் – மக்களுக்குண்மனம்பிர
மிக்கவே கலக்கம் மிகுந் – துக்கம் வந்து தொடருமே

௰௧

சமுத்திரத்திற்றரங்கங்க – ளிமிழ்த்துப்பேரொலியிட்டிடு
மமுக்குங்கால மளாவலாற் – சமித்தலின் மக்கள் சாம்புவார்

௰உ

வேறு

இத்தகைப் படிமேல்வையின் மானிடப்
புத்திரன் குறிவானம் புலப்படு
மத்தருணம் பூலோகத்தனைவருந்
தத்தளிப்புடன்றுங்கள் புலம்பியே

௰ங

மானிடப் பிள்ளை வானத்தின் மேகங்க
ளானவைகளின் மேன் மிகுமாற்றலு
மேன்மை கூருமகிமையுமேவுறத்
தான் வருவதைக் காணுவர்தங்களால்

௰ச

மேகவாகனர் தூதரை மிக்கொலி
யாகச் செய்யெக்காளத்தோடனுப்புவா
ரேகியேயாதியந்தமட்டும் மிவர்
வேகஞ்சேர் நாலு காற்றுகள் மேவிடும்

௰ரு

நாற்றிசைகளினின்று நரரையொன்
றாற்றும் வண்ணமழைத்துக்குழூச்செய்வார்
தேற்றமாயுங்கட்குச் செப்புவேனென்று
சாற்றுவாரிரட்சிப்புத்தலைவரே

௰சா

வேறு

இவை சம்பவிக்குமட்டுமிந்தச் சந்ததி போகாது
நவிலுமந்நாளையுநாழிகையையுமென்பிதா வைத்
தவிர யாவரும் பரத்திற்றங்குந் தூதருந்தாமேயரார்
புவியீர் நும்மிருதயங்கள் பொசித்திடும் பொருள்களானும்

௰எ

வெறியினாலும் பிழைப்பின் மிகுந்துயராலும் பாரஞ்
செறிதரச்சுமத்தப்பட்டுச் சடிதியிற் செப்புமந்நா
ளுறவுங்கள்மேல் வராமலுய்யவேண்டிடுவீராவீர்
பெறவருமதுவோ பூமியோர்க்கெலாம் பெரிய கண்ணி

௰அ

ஆகையாற் சம்பவிக்குமதற்கு நீர் தப்பிக்கொண்டு
மேகவாகனர்க்கு முன்பாமேவப்பாத்திரராயெண்ணற்
கேகிட வெக்காலத்துஞ் செபித்தென்றும் விழித்திருங்கள்
சாகவே வேண்டாமென்றார் செத்துஞ் சாகாதிருப்போர்

௰௯

மற்றுமானிடச்சேய்தாந்தம் மகிமையிற் சுத்தத்தூதர்
சுற்றவந்தருளியே தஞ்சுய மகிமைப் பீடத்தில்
வெற்றியாய் வீற்றிருக்கும் வேலையிலவர் முன்பாக
வுற்றிடவனைவருங் கூட்டிடப்படுவார்களொன்றாய்

௨௰

அவரொருமேய்ப்பனாட்டினங்கடாவினமகற்றிக்
குளைவுறச் செய்யுமாப்போற் கூட்டத்தோரைப்பிரித்து
நவிலுமாடனையோரைத் தம்வலப்பக்கநண்ணச்சேடிப்
பவரைத் தம்மிடப்பக்கத்துப்பாங்குடனிறுத்திவைத்தே

௨௧

வலமுளோருக்குச் சொல்வார் வாருங்களென்பிதா வா
னலங்கொளா சீர்வதிப்பு நவிலப்பட்டவரே யுங்கட்
குலகு தோற்றம் முதற் கொண்டாயத்தமுனாற்றப்பட்டப்',[ருல்
பலனிராச்சியத்தைச் சொந்தம்பண்ணிகொளுங்களேனென்'

௨௨

பசித்திருந்தேற்கு நீர் சாப்பாடளித்தீர் தாகித்தேன்
பொசிக்க நீர் நீரளித்தீர் புகல் பரதேசியானேன்
வசித்திடச் சேர்த்துக்கொண்டீர் வத்திரமின்றிருந்தே
னசைத்திடவஃ தளித்தீர் காவற்பட்டேனங்குற்றீர்

௨௩

எனச்சொல்வாரக் காணீதிமான்களுங் கர்த்தரே யெத்
தினத்தினும் பசிதாகஞ் சீதளந்தனிபிணி தெரிந்து
மனத்துடனவைகடீர்த்தோமெனவகுத்தியம்புவார்க
ளனைத்தையுமடைந்த மேகவாகனரவர்க்குத்தாரம்

௨௪

உண்மையுங்கட்குச் சொல்கின்றேனீவிருலகோருக்கு
ளெண்மையோரானவிவ்வென்சோதரர்களிலேகற்குப் [பார்
பண்ணியவெவையோவெல்லாமெனக்குப் பண்ணினவாமென்
புண்ணியக்கிரியை செய்தோருக்கெலாம்புகன்று விட்டே

௨௫

பிறகிடப் பக்கத்தோர்க்குப் பேசுவார் சபிக்கப்பட்டீ
ருறவெனைவிட்டுப் பேய்க்குமோததின்றாதருக்கு
நெறியெத்தனிக்கப்பட்ட நித்தியாக்கினியிற்போங்க
ளறவுமென் பசிக்குண்டாகக் கமுதமம் மணத்துக் காடை

௨௬

பரதேசத்திற்குச் சேர்ப்புநோய் காவல் வந்து பார்த்த
றருதல் செய்திரேயலீரென்று சாற்றிடுவாரன்னோர்
பெருமையாண்டவரேயும்மை நாங்களெப்போது கண்டே
முரைசெய்தவவைகட்கெல்லா முழியஞ் செய்தேமல்லேம்




உஎ

என்றுரைத்திடுவாரந்தவேல்லை [illegible] ங்கொள்ளார்
நின்றிடுபவர்க்கு மாற்ற நிச்சயமுரைச[illegible]
துன்றியவனைவர்க்குள்ளுஞ் சிறியராமிவருட்டோன்று
மொன்றவற்கென்ன செய்யாதிருந்தீரோவஃதும்மாலே

உஅ

எனக்குச் செய்யாதிருந்தீராணீ ரென்றுரைப்பாரென்றே
சனத்திரள்களுக்கியேசுத்தந்தை யப்படியேயிங்கோ
ரனித்தியமில்லாத் துன்பந் தன்னினுமந்த நீதி
மனித்தரோ நித்த சீவன்றனிலும வைகிடுவாரென்றார்.

---



## மரணத்தோடு போர் செய்த சருக்கம்.

க

அஞ்சா நாளாகிய வியாழக்கினன்றி யேசு குரு
தஞ்சீடர்களுக்கற்புதமாவிருந்துண்பித்துத் தங்கிரியை
கொஞ்சமேனுங் குறையின்றி முடித்த பின்னர் குருதன்னை
நெஞ்சிற்குடிவைத்திடு சீடர் தம்மோடன்று நிசியினிலே

உ

எருசலேமிலிருந்த விடம் விட்டுக் கிதரோனென்ன
வருமோராற்றுக் கப்புறத் தேவை கொலீவமலையடைந்து
மருவு சீடர் தமை நோக்கி வருவீரிவ்விராத்திரியி
லொருமித்தெல்லோர்களுமென்பாலிடறல்படுவீரெனவுரைத்தார்

ங

என்னெவெனின் மேய்ப்பனை வெட்டுவோம் மந்தையினாடுகளெல்லா
மன்னேரத்திற் சிதறடிக்கப் படுமென்றெழுதியிருக்குமதைச்
சொன்னேனென்றார் பேதுருவோ நும்பால் யாவர்தோய்வுறினும்
பன்னுவே நானொருக்காலுமிடறல் படுவேனலனென்றான்

ச

மெய்யே யிவ்விரவிற் சாவலிருகால் விளிக்குமுன் னென்னைப்
பைய முக்கால் மறுதலிப்பாயென்றே பகர்ந்தார் கிறிஸ்துவவ
னையரே நும்மோடிறக்கவேண்டிற்றேனுமஃது செயேன்
செய்யேனென்றானப்படியே சீடர் யாருஞ் செப்பினரால்

ரு

அதன் பின் கெத்சேமனே யென்னு மிடத்திலமர் தோட்டந்தனிலே
கதிசெய்திருந்து சீடருடன் கரைவார் கிறிஸ்து நானங்கே
துதிசெய் செபம் பண்ணளவு மிங்கே துன்னியிருமினென்று சொலிப்
பெதுருதனையுஞ் செபதேயுப் பிள்ளை யாகோபுடன் யோவான்

௬

ஆய்விருவர்தமையுமுட்னழைத்துக்கொண்டா குலப்படவு
நோயதுக்கமடையவுமேதுவக்கினாராய் நுவலுவரென்
றாயதாமாத்தும மரணமட்டுந் துக்கமாகிறது
நீயிரீங்கென்னோடும் விழித்திருமினென்றே நிகழ்த்திப்பின்

௭

தனியேயோர் கல்லெறி தூரஞ் சார்ந்து முழங்காற் படியிட்டுக்
கனிவாய்ச் செபித்துக் கூடுமேற்பிதாவே காண்பாத்திரமிதுதா
னெனைவிட்டகலக்கடவதெனக் கோவன்றுமக்கேயிருக்கின்ற
நினைவின்படியாவதுவேயாகுகவென்றார் பேய் நிலைகண்டோர்

௮

அவரேவந்து சீடர்களைத் தூங்கக்கண்டப்பேதுருபா
லிவித நீங்களிருகடிகையேனு மென்பால் விழித்திருக்க
வொவவேயிலையோ நீவிர் சோதனைக்குட்படாது விழித்திருந்து
செவமே செய்யுமாவிமனதுளது தான் சேர் மாமிசமோ

௯

வலனற்றிருக்கின்றது வென்றார் மற்றுமிரண்டாந்தரமந்தத்
தலம்போய்ச் செபித்துப் பிதாவே காணிப்பாத்திரஞ் சாப்பிடாவிட்
றொலையாதாகிலுமது சித்தப்படியாகுகவென்றே சொன்னார் [டாற்
விலகித்தாமே வந்திவர்கள் விழிப்பின்மையினைக்கண்டனரால்

௰

அதிகத் தூக்கமடைந்திருக்குமவர்கடமை விட்டகன்றந்தப்
பதியின் மூன்றாந்தரஞ் செபித்து முன்னேபகர்ந்தபடிபகர்ந்தார்
ததியில்வந்தோர் வான்றூதன் கண்பட்டவரைத் தகைவன்மை
வதியச் செய்தானவர் மரணவவஸ்தைமாவுக்கிரத்தோடும்

௰௧

இருந்தே செபஞ் செய்தாரவர்தம் வெயர்வை யிரத்தப்பெருந்துளி
தரைமீதினிலே விழுந்தனவப்போது தஞ்சீடர்கள்பால் வந் [யாய்த்
தொருவாத்தூக்கத்தவருடனே யுரைப்பாரின்னு நித்திரையை
மருவியிளைப்பாறிடுவிர்களோவென்றிதோ மானவமைந்தன்

௰௨

பாவிகளின் கைகளிலொப்புக்கொடுக்கப்படுவேளையுமணித்தாய்
மேவிற்றெழுந்துவாருங்கள் போவோம்விரைந்தென்னைக் காட்டி
யீவானருகிலெய்தினானென்றேயியம்பினார் மனிதர்
சாவுமவஸ்தை யாவுந் தாமடைந்து மோட்சந் தரவந்தோர்.

---

## காட்டிவிட்ட சருக்கம்.

க

ஓடரோடியேசு போய் வருதல் தேர்ந்தவ
னுடக்காட்டிடும் யூதாவென்னு நாமத்தோன்
றேடியே பிடிக்கச் சேவகரின் சேர்வையை
கூடுறுமுக்கியக் குருக்கண்மார்களின்

உ

பரிசேயர் தங்களின் பணி செய்வார்களை
வரிசையாயழைத்துக் கைப்பந்தந் தீவத்தி
யுரியவாயுதங்களுமெடுத் தொருங்கு சேர்ந்
தரியராங்குருவமரிடமடைந்தனன்

௩

அடைவனவறிந்திருக்கின்றவையருந்
தடையிலாமலே வெளிவந்து தம்மெதிர்ப்
படவந்த தீயரைப் பார்த்தியாரை நீர்
தொடரத் தேடா நின்றீரென்றுதோன்றினர்

௪

நாசரேத்தியேசுவை யென நவின்றன
ராசிலாவியேசு நான்றானென்றாரக்கான்
மோசவுள்ளத்து யூதாவு மொய்ப்பருள்
வாசமாயிருந்தனன வள்ளல் வாயினல்

௫

நானென்று சொன்ன போதவர்கள் பின்னணி
மோனமாய்த் தரையிடை மோதவீழ்ந்தனர்
ஞான நாயகர் மற்றும் யாரை நாடுவி
ராணிரென்றாரியேசுவை யென்றாரவர்

௬

சொன்னேனென்றுனென்றே சொல்லக்கேட்டு நீ
ரென்னைத்தேடிடிவிவர் போகட்டுமென்று
ரின்னது நீ ரெனக் கீந்த பேர்களுண்
மன்னொருத்தனையு நானிழத்தல் வாய்ந்திலேன்

௭

என்றதன் சொன்னிறைவேறத் தானிப்பாற்
றன்பரிவாரர்க்குக் காட்டத்தான் யூதா
வென்பவனெவனையான் முத்தமிட்டேனோ
வன்புறுமவனே நீரவனைவவ்வுமின்

௮

எனவடையாள மொன்றியம்பியேசுபாற்
கனிவென வாழ்வி ரபீயென்றேசுட்டி
முனமுத்தமிட்டனன் முதல்வர் நண்பனே
நினதிந்தவரவு நீ முத்த நேர்ந்ததால்

௯

மானவமைந்தனைக் காட்டிவைக்கவே
தானே யென்றுரப் போதவர்கடங்கையை
ஞான நாயகரின் மேற்போட்டுநற்குரு
வானவியேசவரைப் பிடித்தனர்

௰

சுற்றியங்கிருந்தவர் தோன்றற்பாலது
பற்றியாண்டவரேபட்டயத்தினால் வெட்ட
லுற்றிடுவோமோ வென்றுரைக்கவப்பொது
தெற்றெனச் சீமோன் பேதுருகைச் சேர்ந்தவோர்

௰௧

பட்டயத்தாற் பிரதானாசான் பணி
யிட்ட செய்வான் மல்கென்போன்வலச்செவி
வெட்டினன் பேதுருதனை விளித்தையர்
விட்டுறைப்படுத்ததை விறல் செய் பட்டயம்

௰௨

எடுத்தவன் பட்டயத்திறப்பனென்பிதா
கொடுத்த பாத்திரங்குடியாதிருப்பேனோ
விடுத்தென் பிதா மூந்நாற்கோடிமேலவர்
மடுத்தென்பாற்றூதரை நிறுத்திவைக்கநான்

௰௩

வேண்டக்கூடாதென்றுள்விளைத்தையோ வென்றே
தீண்டிமல்குவின் செவிச் சேத நீக்கினா
ராண்டவர்கும்பலோர்க்கறைவர் நீர் கள்ளம்
பூண்டவன்மேற் புறப்படுதல் போலவே

௰௪

கத்திதண்டத்தொடெற்கவர வெய்தனிர்
நித்தநும்பாற்றேவாலயத்தினின்று நான்
பத்தியாருபதேசம் பண்ணியே வந்தே
னத்தருணத்தெனைப் பிடித்திரல்லையே

௰௫

ஈதுங்கள் வேளையுமிரவின் வன்மையு
மாதலாயிருக்கின்றதென்றறையரப்
போது சீடர்களெலாமோடிப் போயினார்
சேதமார் கலகத்திற்சேலைப்போர்வையான்

௰௬

ஒருத்தன் வாலிபனவர்க்குப்பின் போடினா
னிருத்தவாலிபரவன்றனை யிழுத்தனர்
தரித்திரானின்ற சேலையினைத்தள்ளியே
நெருக்கம் விட்டவனிருவாணி நீங்கினான்.

---

## ஆசாரியன் முன்னே பாடுபட்ட சருக்கம்.

க

பிடித்தவியேசுவைத்தான் பிரதானகுருகாய்பாவுக்
கடுத்தமாதுலனுமன்னு வண்டையிற்கொண்டுபோனார்
தடுத்தவனியேசுவைப் போதகத்தையேகருதிக்கேட்டா
னெடுத்தியேசுவுநான் யார்க்கும்வெளிப்படவியம்பினின்றேன்

உ

யூதர்கள்வந்துகூடு மாலயத்துபதேசித்தேன்
யாதொன்றுமறைத்தேனல்லே னீரெனைக்கேட்பதென்னே
போதக்கேட்டவரைக் கேண்மினென்றவருரைத்தபோதே
யீதுதான்குருமுன்பாக வியம்புமுத்தரமோவென்று

ங

ஊழியக்காரருக்கு ளொருவனிவ்வுலகோர்கட்கு
வாழ்வளித்தருளியேசு வள்ளலையறைந்தானோங்கிச்
சூழ்ந்திதானஞ்சொல்வனே யடித்தையேனென்றார்தூயர்
கிழ்மைகொளன்னாகாய்பா கேட்டிடவனுப்பினனே

ச

வேதபாரகருமூப்பர்களு மேவியிருந்தாரங்கே
நாதரைப்பகைத்துக்கொல்ல நாடினார்பொய்ச்சான்றுரைர
யாதொருத்தருமிலாமற் கடைசியிலிருவர்வந்து
மீதுகைப்பணியித்தேவாலயத்தைத் தானிடித்துவிட்டே

ரு

வேறொன்றைமூன்றுநாட்குட் கட்டுவேனென்றுமீறிக்
கூறினானிவன்கேட்டோமே யென்றனர்கொளற்பாற்றன்றால்
வீறுடன்பிரதானாசாரிய னெழுந்திருந்துமேன்மை
யேறுமெய்ப்பராபரன் சேய்கிறிஸ்துவாயிருக்கின்றாயோ

சா

என்றெங்களுக்கியம்பச் சீவனுந்தேவன்பேரி
னின்றுனையாணையிட்டுக் கேட்கிறேனீசொல்லென்றா
னன்றியேசுவுநீர் சொன்னபடியேயென்றேகவில்வா
ரின்றுமுன்னாக்கொண் டியம்புமானிடச்சேய்தன்னை

எ

வல்லமையின்வலதுபாரிசத்தில் வைகிருக்கவும்வா
னிலகுமேகங்கண்மேலே வரவுங்காண்பீர்களென்றார்
சொலவுமவ்வாசான்றன் வத்திரங்களைத்துமித்துக்கொண்டு
நிலைமையாயிவனே தேவதூடணைநிகழ்த்தினனே

அ

இனிச்சான்றாலென்னவுங்கட் கெப்படித்தோற்றமென்றான்
றனிமரணத்துக்கேது துன்னினனென்றாரக்காற்
றனியர்தம்முகத்திற் றுப்பித்தலையினிற்குட்டினார்க
ளனரறைந்துங்கிறிஸ்தே யடித்தவனுமையாரென்று

ஞானநோக்கத்தா லெங்களுக்குநீர்நவிலுமென்றா
ரீனமாய்வேறுவேறா யிம்பியேதூடணித்தா
ரானபோதினிற்சீமோன் பேதுருவையவ்விடத்திற்கண்ட
மானவர்நீயிவன் சீடர்களிலோர்மனிதனன்றோ

௰

எனவினாவினர்நான்காணே னென்றவன்மறுதலித்தான்
வினவினார்பின்னுமந்த விதமேசொல்லிச்சாதித்தா
னினவிருகாலுஞ் சாவல்கூவிற்றேயிணையில்கர்த்த
ரனையவன்முகத்தைப்பார்த்தா ரவன்றனக்கவர்முன்சொற்ற

௰௧

சாவல்கூவிடுமுன் மூன்றுதரமறுதலிப்பாயென்ற
தேவவார்த்தையைநினைத்துச் சிந்தித்துவெளிப்புறப்பட்
டாவோவென்றுளங்கசிந்தேய ழுதனனலகைச்செய்கை
யாவிலுந்தோன்றலோராப் பேதுருவென்னுஞ்சீடன்.

---

## பிலாத்துக்கு மெரோதேயுக்குமுன் பாடுபட்ட சருக்கம்.

௧

தேயங்களனைத்துஞ் செங்கோல்செலுத்துமி
ராயனுக்குள்ளிராச்சியஞ் செயுந்துரை
யாயபொந்தியுபிலாத் தமர்ந்துநீதிசெய்
நேயமாரரண்மனைக்குண் ணிருந்துவான்

௨

வானவிராச்சியஞ் செய்யுமன்னரே
யானவியேசுவை யவர்கள்யாவரு
மீனக்காய்ப்பாவிட மிருந்துங்கொண்டுபோய்
மானவாயற்படிக்குள் வரச்செய்தார்

௩

விடியற்காலமேயந்தக் காலமேவினோ
ரடையவும்பஷாவுண வெண்ணியசுத்தந்தாம்
படலுறாதென் றரண்மனைக்குட்பட்டிலர்
கடைமுகத்திருந்தனர் கபடவேடத்தோர்

௪

இப்படிக்கிருக்க வியேசுட்சென்றபின்
செப்பியபிலாத்திது தெரிந்துமுன்றிலிற்
குப்பலோரிடஞ்சென்றாக் குற்றமாயென்ன
வைப்பதுகொண்டிவன் றனைவருவித்தீர்

௫

என்றனனவர்கள் பொல்லாங்கிவன்செய்தா
னன்றேனின்னிடமொப்புக் கொடோமென்றாரவன்
சென்றுங்க ணீதியின்படியேதீருமி
னன்றியாயென்றன னவில்வர்யூதர்கள்

௬

ஒருத்தனையுங்கொலவுறா தெங்கட்கென்றார்
மரித்திடப்போங் குறிப்பாயவார்த்தையாய்க்
கருத்தர்சொன்னது நிறைவேறத்தானக்கா
லிருத்திவன்சாதிமாறி யற்றுவோனுமாய்

௭

தன்னைத்தான்கிறிஸ் தரசென்னச்சாதித்தே
மன்னனிராயற்கு வரிகொடுப்பதைப்
பின்னஞ்செய்வோனுமாய்ப் பிடித்தனங்கண்டே
யின்னவன்றனையென்றே குற்றமேற்றினார்

௮

ஈதுபிலாத்துகேட்டுட் சென்றேசுவை
யூதர்மன்னனோநீ யென்றுரைத்துசாவினா
னோகியதுமதுசொல்லோ வலதுவே
றேதிலரெனைக்குறித் திசைத்ததோவென்றார்

௯

உரோமப்பிலாத்து யூதனோநானுன்குலத்
தராலுமேமுக்கி யாசாரியராலு
நிராதரவாலென்பா னிறுத்தப்பட்டனைத்
துராகிருதமென்னோ செய்தைசொல்லென்றான்

௰

என்னிராச்சியமிந்த வுலகதேலெலனை
யன்னயூதர்க்கொப்புக் கொடாதவாற்றலாய்
முன்னரென் பணிவிடைக்காரர்மோதியே
மன்னுவரிப்போதென் மகிழ்விராச்சியம்

௰௧

இவ்விடத்தினதல வென்றிசைத்தன
ரவ்விதமாயினீ யரசனோவென்றா
னொவ்வுநின்னுரைப்படி நானரசன்றான்
றிவ்வியமெய்க்குச் சான்றீயச்சென்மித்தேன்

௰௨

இத்தராதலத்தி தற்காகத்தான்வந்தேன்
சத்தியவானே யென்சத்தங்கேட்பனென்
றுத்தரமுரைத்தர் நாத்திகனென்றோதவ
னெத்திறஞ்சத்திய மென்பதென்றேபின்

௰௩

அப்புறம்போயவன் யூதர்பாலிவன்
றப்பிதஞ்செய்ததாய்ச் சாற்றிடேனென்றான்
குப்பலாய்க்குருக்கண்மார் குற்றஞ்சாட்டினார்
செப்புவானியேசுவைத் திரும்பிப்பார்த்தரோ

௰சு

நீவதிலொன்றுஞ் சொலாயோநின்குற்ற
மாவதாயெத்தனை யறைகின்றுரென்றான்
றேவருந்துரை யதிசயிக்கவாய்திறந்
தேனைக்குமெதிருரை யாதிருந்தனர்

௰ரு

எருசலேமெரோதை பாலேகச்செய்தனன்
வருமியேசுவையவன் மகிழ்ந்துகண்டனன்
பெருமையைப்பலர்சொலக் கேட்டுப்பெட்புடன்
றரிசனஞ்செய்யக் காத்திருந்தன்மையால்

௰சா

அனந்தம்வார்த்தைகளினு லவரைக்கேட்டனன்
மனந்தனுலுநினைக் காமலவைகினு
றினம்படும்வேதபாரகர் குருவினங்
கனம்படுங்குற்றங் கட்டிக்கொண்டேநின்றுர்

௰எ

அந்தவெரோதேதன்னுட் கடன்னுட்
னிந்தையாயெணிப் பரிகசித்துநேருடுப்
பிந்தவியேசுவுக் கீந்துப்பின்னரும்
பொந்தியுபிலாத்திடம் போகவிட்டனன்.

---

## ஆக்கினைத்தீர்ப்புச் சருக்கம்.

க

யூதரானவர்தான்செய் குற்றங்களையுரைத்தாற்
சேதமாமிராயனுலெனப் பயந்தவர்செப்ப
லேதுமேயவர் மனப்படியியற்றும்பிலாத்தெப்
போதெவனைக்காவல்விடப் புகல்வரோவிடுவான்

உ

கலகத்திற்கொலைசெய்து காவற்கட்டிலிருப்போர்
பலருடன்பரபாவென் போனிருந்தனன்பண்டு
ணிலைமையின்படி விடுவிக்க நிகழ்த்தினுர்யூதர்
தலைவனும்பிலாத்தெவனைநான் விடனுஞ்சம்மதமே

ஙு

உரைசெய்ம்மின்பரபாவையோ வல்லதுயூத
ராசனுங்கிறிஸ்தியேசுவையோ வென்றுனவனே
குருவினத்தவரேசுவைப் பொறுமையாற்கொணர்ந்தா
ரொருவிதத்தினுங்குற்ற மின்றெனவுணர்ந்திருந்தான்

சா

அனையகாலையிலவன் மனையாளுமாளனுப்பிக்
கனவினீதிமானுயவி யேசுவைக்கண்டே
யினைதலுற்றனனுதலா லிவற்குநின்றனக்கு
மெனையதன்மையுமிழந்திடென் றியம்பச்செய்வித்தாள்

ரு

மூப்பருமுக்கியக் குருமார்களுமுனைந்தே
காப்புறும்பரபாவை விட்டிடவுங்கர்த்தரையே
யாப்புடன்கொலைசெய்யவு மெவருஞ்சம்மதிக்கக்
கோபமியச்சொல்லான் முடித்தனர்துரையுமேகூவி

சா

இருவரிலெவனொருவனை யான்விடவென்றான்
றிரளினோர்பரபாவை யென்றார்துரைநினைத்தே
யருமியேசுவை யென்னசெய்வேனென்றானவர்க
ளொருசிலுவையிலறையறை யென்றொலித்திட்டார்

எ

பிலாத்துவிட்டிடுமனத்தனாய்ப் பின்னருங்கூவிச்
சிலாக்கியனெந்தக் குற்றமுஞ்செய்திலனமரணப்
பொலாப்பெதுவுங்கண்டில னென்றேயன்றுமுறைபுலம்பி
யெலாத்துக்குந்தண்டித்தே விடுப்பேனென்றானிவனும்

அ

அவர்களோசிலுவையி லறைந்திடச்சொலியதிர்த்தா
ரிவர்களோடுமாசாரிமார்களு மிரைந்திட்டா
ரெவரையுஞ்சரிப்படுத்துவா னெணிப்பரபாவைக்
கவர்தல்விட்டியேசுவை யடித்திடவேகாட்டினனே

சு

வாரினாலடித்தவனது சேவகர்வலிந்துச்
சீரியேசுவைச் சிறைசெயுஞ்சாலையுட்செலுத்திச்
சேர்வைக்காரரை யவரிடஞ்சேர்த்துடைமுதலாய்ப்
போர்வையைக்களைந்திரத்தக் கஞ்சுகம்புணர்வித்து

௰

முட்களாலொருமகுடஞ் செய்தேயவர்முடிதா
னுட்படும்படிமேல்வைத்து வலதுகையொருகோ
லிட்பமாய்ப்பிடித்திடக் கொடுத்தவர்முன்புசென்றே
மட்படுமுழந்தாளிட்டு யூதர்மன்னவரே

௰க

வாழ்கவென்றவரைப் பரிகாசச்சொல்வகுத்துக்
கோழைநீரவர்மேற்றுப்பிக் கோலினையெடுத்துச்
சூழுமுண்முடிச்சிரசின் மேலடித்தனர்துட்டப்
பாழுமயூதர்க்குப் பயப்படும்பிலாத்துப்பாவியினால்

௰உ

மற்றுமேபிலாத்தும் வெளிவந்திதோவிவன்பாற்
குற்றமொன்றுநானறியே னீங்களுமதுகொள்ள
நற்றரத்துளவவன்றனை வெளிநண்ணச்செய்வேன்
பற்றுமின்கண்ணாலென்ற னனியேசுவாம்பரமர்

௰௩

முள்ளினாற்செய்தமுடியுஞ் சேப்பங்கியுமூட்க்
கொள்ளுமெய்யினராய் வெளிவந்தனர்குறித்தே
யுள்ளமும்பதைத்துரைகளுங் குளறியேபிலாக்து
மெள்ளவேயிந்தமனிதனென்றான் மெய்யில்விதிர்ப்பாய்

௰௪

வேதபாரகர்குருக்கண்மார் கண்டனர்விரைந்திப்
போதேதான்சிலுவையிலறை யெனப்புகன்றனரே
யீதுகேட்டலும்பிலாத்து நீரிவனைக்கொண்டேகி
யோதுமோர்சிலுவையிலறைந் தொழிமினேனென்னில்

௰௫

காண்கிலேனவனிடங்குற்ற நானெனக்கரைந்தான்
வீண்புகன்றிடும்யூத ரெங்களுக்குளோர்விதியா
மாண்புசேரதின்படி யிவன்மரித்திடவேண்டு
மேண்கொளுமது வேனெனிலியம்புவோங்கேணீ

௰௬

தன்னைத்தான்பராபரன் சுதனாக்கினான்றதுநீ
மன்னிப்பாலிவன்றனை விடுவித்தையேன்மகிப
னென்னிராயனுக்கிட்டனே யல்லைநீதன்னைப்
பன்னிமன்னனுக்குவ னெலாம்பகையிராயனுக்கே

௰௭

என்றுகூக்குரலிட்ட னரிடுமிதைக்கேளா
நின்றியேசுவையழைத்துப் போய்நீதிக்கேநியம
மொன்றியுள்ளதாய்மேடையாய்த் தளத்தொத்துமைத்தாய்த்
துன்றுங்காவலையுடையதாஞ் சூழலுட்டோன்றும்

௰௮

நீதியாசனத்திருந்து பிலாத்துநேர்கதறும்
யூதர்தம்மைக்கூயிதோவுங் களிராசனென்றுரைத்தான்
றீதுசெய்பவர்தள்ளைத் தள்ளைச்சிலுவை
மீதறைந்திடென்றேமிகுந் தொலித்தனர்பிலாத்தும்

௰௯

இறைவனுங்களிராச னியேசுவைச்சிலுவை
யறைவெனோவென்றான் முக்கியாசாரியரதற்கு
நிறையுமெங்களுக்கிராயனை யன்றியேநிருபன்
பிறனொருவனுமிலையிலை யென்றனர்பிலாத்தோ

௨௰

எண்ணியெண்ணிப்பார்த்தென் செய்வேனேதுமாகாமற்
பண்ணிடுங்கலகங்களே பலப்பட்டதென்றுத்
தண்ணிரேந்திக் கும்பலின்முனந்தன்கையைக்கழுவி
நண்ணிந்நீதிமானிரத்தக் குற்றத்தினைகன்றேன்

உக

நீங்கள்பாருங்களென்ற னனிலைதடுமாறிப்
போங்குலத்தவராய யூதர்கள்புகல்வார்க
ளீங்கிவனிரத்தப்பழி யெங்கண்மேலெங்க
ளோங்குஞ்சந்ததிமேலிருக் கட்டுமென் றுரைத்தார்

உஉ

அப்போதேபிலாத்தையரைச் சிலுவையிலறைதற்
கொப்பளித்துவிட்டா னிஃதோபிலாத்துரோம
னிப்படிக்குயூதர்கண் மனப்படிசெய்தானெனினுந்
தப்பிதம்பிலாத்ததுவென்றே சகலர்க்குந்தெரியும்.

---

## சிலுவையிலறையுண்ட சருக்கம்.

க

சிலுவையிலறையச் செப்பியொப்பித்தபின்பவன் சேர்வைவேலையருட்
கொலைசெயுமனிதரியேசு தேகத்திற்கொளுவியவங் கியைக்கழற்றிக்
கலைகளையுடுத்திச் சிலுவையிலறையக்கொண்டு போங்காலையிலவரே
நிலையதஞ்சிலுவை மரத்தினைச்சுமந்தே நிகழ்ந்தனரந்தவேலையினில்

உ

வயல்களினின்றுஞ் சிரேனேயூரான் சீமோனென்போன்வந்தனனவனை
நயமுறப்பிடித்துச் சிலுவையைச்சுமந்து நாயகரோடுபின்வரவே
நியமித்துவைத்தார் மிகுதியாய்க்கூடாநின்ற மாந்தருமவர்க்காகத் [ரூர்
துயரமுற்றழுது புலம்புமாதருமேதொடர்வு கொண்டையர்பின்சென்

ங

அவர்முகமாகத் திரும்பியேயையரறைந்த தென்னவெனிலீங்கு
நவிலெருசலேமின் குமாரிகாணீவிர் நைந்தழாதீரெனக்காகக்
குவியுமுங்கட்காகவுமுங்கள் பிள்ளைக்குழாங்களுக்காகவுமழுங்க [பால்
ணுவல்வதேனென்னி லிதோமலடியுநொங் தேமகப்பெருக்கருப்பமும்

ச

உணக்கொடுக்காதமுலையும் பாக்கியமுள்ளனவென்றுசொலப்படுநாட்க
ளணுகிவந்திடுமப்போதுதான் மலைகாளெங்கண்மேல் விழுமென்றுமந்
[தக்
குணமுடன்குன்றுகாளெமை மறைத்துக்கொளுமென்றுங் கூறவேமுய
[ல்வார்
துணர்பசுமரத்துக்கிவைசெய்தாற் பட்டமரத்துக்கென்சொலப்படுமெ
[ன்றூர்

ரு

குற்றவாளிகளாயிருக்கும் வேறிருவரவருடன் கொலைப்படுதலுக்குப்
பற்றித்தான்கொண்டுபோகப்பட்டார்கள் படர்ந்துகொல்கதாவென்றே
[பலரு[illegible]
சொற்றிடுமிடத்தையடைந்த போதறிவைச்சுழற்றுவதாங்காடிநீரை
மற்றவரவர்க்குக்கொடுத்தனர் குடிக்கமனதிலாராயினரியேசு

சா

ஆங்கியேசுவையும் வேறிருகுற்றவாளிகட்மையுநேர்நிறுத்திப்
பாங்கெனுமிடத்தில் வலத்திலவ்விரண்டுபாவிகடம்மையுநடுவிற்
றீங்கிலாதுயர்ந்ததேவராய் மனிதர்பவமெலாந்தீர்த்திடவந்த
தேங்கருளியேசுகிறிஸ்தையுஞ் சிலுவைமரங்களிற்சேர்த்தறைந்தனரே

எ

அக்கிரமக்காரரிலொருவராக வெண்ணப்படுவாரெனவறையு
மூக்கியவேதவெழுத்திந்தப்படியே முடிவுதான்பெற்றதிந்நாழி [குற்ற
தொக்குமேழரையா யிருந்ததுபிலாத்தோர்வசனத்தைத் தூக்குற்றோர்
மிககதேயிதுவென்றெழுதியல்பாக வெழுதியச்சிலுவைமேற் போட்
[டான்

அ

அறைந்திட்டப்பட்டவிடம் பட்டணத்துக்கருகானதாலனேகம்பேர்
நிறைந்துவந்தந்தவசனத்தைப்படித்தார் நிகழுதிலெழுதியவெழுத்தா
யிறைந்ததியேசுநாசரேத்தான் யூதர்களினிராசனெனனுஞ்சொற்
பிறந்தவப்போதேபிரதானகுருமார் பிலாத்துத்தேசாதிபனிடத்தில்

கூ

யூதர்களிராசாவென்றவன் சொன்னானென்றெழுதிடுதியென்றுரைத்தா
ரீதினுக்கெதிராய்ப் பிலாத்துநானெழுதினதே யெழுதினதெனவிசைத்
கோதிலியேசைச்சிலுவையிலறைந்தபின்னர் கூட்டத்துசேவகர்க [தான்
ளாதனங்களையாட்கொன்றென நாலுபங்கிட்டாரவரதங்கியையும்

ய

இணையிலாமன்முழுவது நெய்யப்பட்டிருந்ததுதுண்டுதுண்டாய்த்
துணிவுசெய்யாமற்றமக்குளார்க் கென்றுசொலச்சீட்டுபோட் டெடுத்
[தார்க
ளணியுமென்வத்திரங்களைத் தங்கட்குட்பகிர்ந்தென்னுடையதின்மே
லெணமுடன்சீட்டிடுவார்களென்வேதவெழுத்துமுற்றுப்பெற்றதினுல்

---

## மரணமடைந்த சருக்கம்.

க

எவரிடத்தினுமன்பே யெய்தியேசுவை
யவதிகள்படச் சிலுவையிலறைந்தபின்
பிவர்கள்பாலிரங்கித் தானேபிதாவேநீ
ரவர்கட்குமன்னியு மஃதேனென்னிலோ

உ

தாங்கள்செய்கிறதின்னதென்று தாமோராப்
பாங்கினரென்றனர் படர்ந்தம்மார்க்கத்திற்
போங்குழுவினர் தலையசைத்துப்புன்மையாத்
தேங்குறுஞ்சொற்சொலிச் செப்பலுற்றனர்

௩

தேவவாலயத்தினைச் சேதமேசெய்து
மூவொருதினத்திற் கட்டுதென்முடிப்போயே
நீவிரைவாய்நின்னை நீயிரட்சிமெய்த்
தேவகுமாரனேற் சிலுவைவிட்டிழி

௪

என்றனர்வேதபாரகரே மூப்பரே
கன்றியகுருக்கண்மார்களே முன்னோருடன்
பொன்றுறுமிவனெலாரையும் புரந்தனன்
றன்றனைப்புரக்கத்தான் றகானேயாயினன்

௫

இசிரவேலரசனே லிங்கிறங்குவான்
விசுவசிப்போமப்போதே மெய்த்தேவன்மே
லசைவினம்பிக்கை வைத்தானவற்கிவனா
மிசைநசையேவிதை மீட்டுவைக்கட்டும்

௬

தானொருபராபரன் றனையனென்றன
னானதாலதுமெய்யே லாகலாமென்றார்
வானவிராச்சிய மகிழியேசுவின்
மானவன்னையு மவளுடன்வண்சோதரி

௭

கிலேயோப்பாவின்மரியாளுங் கேண்மைமக்
தலாவெனுமூர்மரியாளுஞ் சார்ந்தங்கே
சிலுவையினருகு நின்றனர்சினேகித
மலிவுறுசீடன் பேதுருவும்வைகினன்

௮

விழித்தனரியேசு தன்றாயைமிக்கவன்
பொழுக்கஞ்செய்சீடனை யுணர்ந்துதாயைக்கூய்
வழுத்துவாரதோ வுன்றன்மகனென்றார்பின்னுற்
பழிச்சுவோற்கதோவுன்றா யென்னப்பண்ணினார்

௯

ஓதியகுருமொழியு வந்துசீடனும்
பேதுருமரியம்மைத் தாயைப்பெற்றனன்
வேதனைத்தூக்கிட மிசையொருவனே
நாதரைத்தூடித்து நற்கிறிஸ்தெனில்

௰

உனையுமெங்களையுங் காப்பாற்றென்றோதினா
னனையனைமற்றோனக்கினைக் குட்பட்டநீ
யெனையவும்பராபரற் கஞ்சலில்லையோ
வினைதனக்கொத்தவை மேவியுட்பட்டோம்

௱௧

இவரவக்குணமொன்று மியற்றிலாரென்றே
யவனைக்கடிந்தி யேசுடனேயாண்டவா
தவவும்மிராச்சியந் தனினீர்சாருங்காற்
பவவடியேனெண்ணம் படுகவென்றனன்

௱௨

அய்யரன்னாற்கு மெய்யறைகிறேனின்னைக்
கெய்தென்னுடன் பரதீசினிலிருந்
துய்குவையென்றன னுலகமெங்குமவ்
வைகலிற்பதினைந்தாய் வந்தநாழிகை

௱௩

ஆதியாயிருபத்திரண்டரை மட்டுஞ்
சோதியற்றேயந்தகாரந் துன்னிற்றா
லோதியயாமமூன்றொழியுங் காலையி
னாதராமியேசு தானவிழுகின்றனர்

௱௪

வேறு.

ஏலியேலிலாமாவசப்தானியென்று கூப்பிட்டா
ரேலதென்பராபரனே யென்பராபரனேநீர்
பாலனென்னைக் கைநழுகவிட்டதேதெனப்படும்
பாலதாமதனையங்குநின்றோர் கேட்டுப்பன்னுவார்

௱௫

வேறு.

இவனெலீயாவைக் கூப்பிடுகிறானென்றா
ரெவைகளுமுடிந்து தீர்ந்தவென்றியேசுவா
னவரறிந்தேவேதவெழுத்து நன்முடி
வுறத்தாகமாயிருக்கிறேனென்றோதினார்

௱௬

காடிநீர்நிறைந்தபாத்திரத்தைக் கண்டபேர்
பூடெனுங்கடற் காளானிற்பூரித்தந்நீர்
நீடிசோப்புத் தண்டால் வாய்முன்னீட்டினார்
கூடியமற்றையோர் கொடுக்கின்றோர்கள்பால்

௱௭

சற்றிருமெலீயாவந்திவனைத் தாங்கவந்
துற்றிடுவானோபார்ப் போமென்றோதினார்
குற்றமிலியேசுகாடியைக் கொண்டப்போதே
யெற்றுமேமுடிந்த வென்றியம்பிப்பின்பவர்

௰௮

ஓ ஓவென்றே பிதாவே யுங்கையிலென்
னாவியை யொப்பிக்கின்றே னென்றுரைத் தென்றுஞ்
சாவிலா வேசுவுந் தலையைச் சாய்த்துத்தஞ்
சீவனை விட்டனர் திரும்ப வல்லவர்

௰௯

வேறு.

தெய்வவாலயத் திரண்டாயுச்சிதொட்டுக்கீழ்மட்டுந்திரை கிழிந்ததுவே
வையகமுழுது மதிர்ந்ததேகல்லு மலையெலாம் பிளந்ததுவேயடக்கஞ்
செய்த கல்லறைக டிறந்தவேயனந்தல் செய்பரி சுத்தர்களளவின்
மெய்யெழுந்தனவே யேசுநாயகர் தஞ்சீவனை விட்டவப்போது

௨௰

அவரெழுந்தருள்செய் பின்பிவரெல்லாங் கல்லறைவிட்டப்பாற்பட்டுக்
கவின்மிகுசுத்த பட்டணத்துட் போயனேகர் காணப்படுவார்க
ளிவனுறுஞ்சேர்வைக் காரனும்பலரு மிவர்சத்தமிட்டதும் பின்பு [றார்
புவியிற்காண் குறியுங்கண்டஞ்சி யிவர்மெய்ப் பராபரன் புதல்வரேயென்

௨௧

பார்த்திட வந்தோர் நடந்த காரியங்கள் பார்த்துத்தம் மார்பிடைக் கை
[யாற்
பேர்த்துப்பேர்த் தறைந்தேகொண்டு போனார்களவர்க் கறிமுகம்பெற்ற
[பேருங்
கோர்ப்புடன் கலிலேயா நின்றுமவர்க்கூழியஞ் செய்துகூடவே வந்த
நேர்ப்படுமடவார்தூரத்தி லிருந்தேநிகழ்வெலாங் கண்டுநின்றார்கள்

௨௨

மத்தலாவூர்மரியாளும் யாக்கோபுயோசேப்பின்னோர் தாய்மரியாளும்
பத்திசாலொமேயு மிவர்கள்பின் கலிலேயாநின்றும் பத்தியாவந்த
எத்தனைப்பேரோவத்தனை நல்லார்களுமிவைகளை யெல்லாம் பார்த்துப்
புத்தியுணர்ந்து நின்றன ரியேசு பூரணருயிர் விட்டபோது

௨௩

இப்படிக்கியேசுநாயக ருயிரையிழந்திடச் செய்தகாரணத்தைச் [தின்
செப்பிடில் யூதர்கூட்டமோ வன்றுசிலுவைக்குத் தீர்ப்புச்செய் பிலாத்
றப்பிதந்தானோவன் றஃதாதித்தாய் தகப்பன் வழிமனிதக் [மை
குப்பலேலோர்பாவங் கூடியேகொலைக்குக் கொணர்ந்திடச் செய்ததேயுண்

---

## அடக்கப்பட்ட சருக்கம்.

௧

ஆயகாலையி லோய்வுநாட் காயத்தநாளே
யேயதாலந்தப் பெரியநாளினி லுடல் சிலுவை
தோய்விலாமலே யவைகள் காலெலும்புக டுணித்துச்
சேய்மைசெய்ய யூதர்கள் பிலாத்திடத்திற் செப்பினரால்

௨

முறித்தெடுக்குஞ் சேவக ரியேசுக் கிருபுறமொய்த்
தொறுக்கப்பட்டவர் காலெலும்புக ளொடித்திட்டார்
பொறுத்திடா தியேசப்போதே சீவனைப்போக்கி
யிறப்படைந்ததைக் கண்டு காலெலும்பு வெட்டிலராய்

௩

ஒருத்தனீட்டியா லவர்விலாக் குத்தினனுடனே
யிரத்தமுந் தண்ணீரும் புறப்பட்டன விவைகளைக்
கருத்துறக் கண்டோனவைக்குச் சான்றீந்தனன் கண்டோன்
பெருத்தசாட்சி மெய்யாயிருக்கின்றது பேணி

௪

எவருநேசிக்கும்படிக்குத் தான்சொல்வது மெய்யென்
றிவனறிந்திருக்கின்றன னிவைகளோவென்னி
லவையிலோரென்பு முறிவுறுதிருப்பதாக வென
நவில்வேதத் தெழுத்தே நிறைவேற நண்ணினவால்

௫

பின்னும் வேறொரு வேதத்தினெழுத்துதான் பிறங்கப்
பன்னுந் தாங்கள் குத்தினவரை நோக்கிப்பார்ப்பார்க
ளென்னவே யங்கு னரிமத்தியாவெனயூதர்
மன்னும்பட்டணத்தானு நல்லனு நீதிமானும்

௬

அவர்கள் யூகித்துச் செயுஞ் செய்கைக் கசம்மதவானுந்
தவறில் யூகிப்பேயுடைய யோசேப்பெனுந் தக்கோன்
கவனமாய்ப் பராபரனி ராச்சியக்குக் காத்திருப்போ
னிவனன்றைத்தினச் சாயுங்கால மெய்தபோது

௭

துணிந்துவந்தியேசுவின் மெய்யைத் தரச்சொலிக் கேட்டான்
பிணம்பட்டாரோவென் றதிசயப்பட்டுப் பிலாத்தெக்
கணந்தனின் மரித்தாரெனச் சேர்வைக்காரனைக்கொண்
டுணர்ந்துடலை யோசேப்பிடங் கொடுத்தனனுடனே

௮

அன்னவன் மென்மைப் புடவையாலிறக்கின னவனு
முன்னரே யொரிராத்திரி யியேசிட மொழியத்
துன்னிவந்த நீக்கொதேமுஞ் சூழ்ந்திருவரும் வெள்ளை
மன்னும் போளநூறிராத்தல் கொண்டேவந்தாரவர்கள்

௯

அலங்கரிப்பு யூதர்கண் முறையாய்ப் பிரேதத்தைக்
கலந்தகந்தவர்க்கங்களோடளாவிச் சீலைகளிற்
பலஞ்செயக் கட்டினர் சிலுவையி லறைபட்ட
நிலந்தனிலொரு தோட்டமுமதினிக ழொருக்கால்

௰

ஒருத்தனையும் வைக்காப் புதுக்கல்லறை யொன்றே
யிருப்பதாலும் யூதருக்கெலா மாயத்தமென்னும்
பெருக்கநாளிதனாலுமே பெரும்புவியோர்க்குத்
திருக்குருவின் மெய்யினை யந்தக்கல்லறை சேர்ந்தார்

௰௧

வைத்தபின்பு யோசேப்புக் கல்லறையின் வாயலிலோர்
மெத்தவும் பெருங்கல்லினைப் புரட்டிவேய் வித்தா
னத்தருணத்திற் கலிலெயாவிருந் தையருடனே
பத்தியாய் வந்தமாதர் கல்லறைக் கெய்திப் பார்த்தார்

௰௨

கல்லறையையுங் கல்லறையிற் சரீரத்தைப்
புல்லவைத்ததையுங் கண்டுபோயினார் பின்பு
நல்ல கந்தவர்க்கங்களு நறுநெய்யுந் தேடி
யெல்லருங் கற்பனைப்படி யோய்வுநாட்கிருந்தார்

௰௩

ஈங்குமுக்கியாசாரியர் பரிசேயரெல்லா
மோங்கியே பிலாத்திடத்தில் வந்தோதுவா ரந்தத்
தேங்குமெத்தன் முன்னுயிருடன் றிரிகையிற்றானே
நாங்கள் கேட்க மூந்நாளைக்குப் பின்னெழுந்திருப்பேன்

௰௪

என்றுசொன்னதை நினைத்திருக்கின்றன மதனாற்
சென்றவன்றன் சீடர்களிராவிற் கொடுசென்றே
பொன்றினோரினின் றெழுந்தனனென் றெவர்க்குமே புகன்று
முன்றுவக்கெத்தின் பின்னெத்தான் மோசஞ்செய்யாமல்

௰௫

ஆண்டவாவிந்தமூன்று நாண்மட்டுங் கல்லறைதான்
பூண்டிடும்படிக் காவலைச் செய்யெனப் புகன்றார்
வேண்டி நீங்களேபோய்ச் செய்மினெனத் துரைவிளம்ப
மீண்டுக்கல்லை முத்திரையிட்டு மேல்வைத்தார் காவல்.

---

## உயிரோடெழுந்த சருக்கம்.

௧

ஓய்வுநாளாயினபின் மக்தலாவூர் மரியாளும் யாக்கோபின்
றாய்மரியாளுஞ் சாலோமேயு மிவருடன் பலருந் தாங்கள்வந்து
நாயகரைப் பூசிடுவோமென்று கந்தவர்க்கங் கணறுநெய்கொண்டு
ஞாயிறுதிக்கையில் வாரமுன்னாளிற் கல்லறைப்பானண்ணினாரே

௨

இக்கல்லைக் கல்லறையிலிருந்து புரட்டுவரெவரென்றெண்ணிப் பேசிப்
பக்கமிருக்கையிற் பூமியதிர்ந்ததக்காற் பராபரன்றூதன் வானின்றே
யக்கணம் வந்தவ்வாயற் கற்புரட்டி யதிலிருந்தானவன் மெய்மின்போற்
றொக்கவுடையாலி போற்கண்டஞ்சிக் காவலோர் துவண்டு வீழ்ந்தார்

௩

அம்மாதரப்பெருங்கலங்கு நின்றும் புரட்டப்பட்ட மாக்கண்டா
ரிம்மாதர்குண் மக்தலாமரியாள் சீமொன்பேதுரு மெய்ச்சீடர் [கே
தம்மருகினிற்போய்க கல்லறையிலிருந்தெடுத்துங் கர்த்தரைத்தா மெங்
செம்மைகொள வைத்தாரோ வறியேனென்ருண் மற்றத்தெரிவை
[மா்ரோ

௪

உட்புகுந்தியேசுவின் மெய்யினைக் காணுரையப்பா டற்ருரக்கான்
மட்படியா வெள்ளங்கி பூண்டவோர் வாலிபனை வலப்பாகத்திற்
றிட்பமுடனேயிருக்கக் கண்டுதிகைப்படைந்தார்க டிகழ்மின்ஞடைக்
கொட்பிருவரவர்களண்டை வந்துநின்ருரவர்களஞ்சிக் குனிந்துகொ
[ண்டார்

௫

இவ்வித வான்றூதர்களி லொருவனிவர்கட் குரைப்பான் றிகைப்பெய்
[தாதீர்
கவ்வைகொளச் சிலுவை யறையுண்ட நசரேத் தியேசுவையே காணற்
கெவ்விடமென்றே தேடுகின்றீர்க ளவரெழுந்தாரிங்கேயில்லைச்
செவ்வையுயிரோ டிருக்கின்றவரை மரித்தோரிடத்திற் றேடுவானேன்

௬

இவிடங்கல்லறை நோக்கி விரைந்து மரித்தோரிலிருந் தெழுந்தாரென்
யவருடைய சீடர்கட்கு நீங்கள்போய்ச் சொன்மின்களவரை நீங்கள் [றே
கவனஞ்செய் கலிலேயாவினிலிருக்கக் காண்பீர் முன்கலிலேயாவிற்
றிவியஞ்செய் திருக்கும்போ துங்களுடனே மனிதத் திருக்குமாரன்

௭

பாவிகள்கையிற் கொடுக்கப்படவுஞ் சிலுவையிலறைபடவு மூன்ருய்
மேவுநாளினி லெழுந்துவரவும் வேண்டியதென்று விளம்பவற்றை
நீவிர்நினைவீரென்ரு னவர்ணினைந்தச்ச மகிழ்வானிறைந்தே
தீவிரமாய்க் கல்லறைவிட் டியேசுவின் சீடர்க்குவகை செப்பப்போனர்

௮

பேதுருவுமற்ருெரு சீடனுமோடிக் கல்லறையின் பின்னெய்துங்கா
லோதெருவ னுண்ணுழையாமற் குனிந்துச் சீலையுறுவதைத்தான்
[கண்டா
ஞதரவார் பேதுருவோ பின்சென்று கல்லறையுள்ளடைந்துச் சீலை
யேதையுங்கண்டவர் தலைசுற்றியசீலை தனிச் சுருட்டியிருக்கக் கண்டான்

௯

மற்ருெருசீடனு முள்ளேபோயதனைக் கண்டுமன நம்பிக்கைத்தான்
பெற்றனனேனெனி லியேசுவு மரித்தோரினிலிருந்து பிழைத்தெழும்ப
லுற்றிடவேண்டிய தென்பதுணராமையர்லிவ் வாருேர்வாராஞர்
சற்றுந்தாமதிப்பாரோ வையகத்தோருயி ரெழுப்பத்தானேவந்தோர்

---

## மத்தலாவூர் மரியாள் கண்ட சருக்கம்.

க

வாரத்தலை ஞாயிற்றுக்கிழமை வைகறையான
நேரத்தினிலே யெழுந்தருள் செய்தேசுவு நின்றார்
கோரப்பே யேழைத்தன்னிடமே கூடாமற்
றாரத்தேகச் செய்தவரைத் தோற்றேனென்று

உ

மத்தலாவூர் மரியாள் கல்லறை வெளிவைகிக்
கத்துதலோடழுதே கல்லறையுட் கண்ணைத்தா
ளுத்தமரைக் காணாளாய்க் கண்டாளொளிர் வெள்ளை
வத்திர ரிருவர்காறலை பக்கங்களில் வைக

ங

அவ்விருதூதரு மேனழுகின்றா யெனவன்று
ளெவ்விட மதனிற் சுர்த்தரை வைத்தாரிதினின்றுஞ்
செவ்வைகொளத் தெரியேனே யென்றுதிரும்பிப்பின்
றிவ்வியகுருவின் றிருவுருவைத் தரிசித்தாளே.

ச

வேறு.

தரிசிக்கபினு மியேசுதா னெனத் தெரியாளாறு
ளரிவையே னழுகின்றாய் நீ யாரைத்தேடுகின்றா யென்றார்
குருவவரைத்தான் றோட்டக்காரனுக்குறித் தையாவே
யொருவியேசுவை யெடுத்தியேலோது வைப்பிடத்தை

ரு

ஓதினு லெடுத்துக்கொள்வே னென்றனளொரு வியேசு
மாதினை மரியாளேயென்றா ரவண்மதித் துணர்ந்தென்
போதகரே யென்றாளப்போ தியேசுவுமெற்றீண்டே
லேதுதா னென்பிதாவண்டைக் கேறிலேனுனின்னம்

சு

என் சகோதரர் பானீபோ யென்பிதாவிடத்து முங்கண்
மென்பிதாவிடத்துமே வென் பராபரனிடத்து முங்க
ளின் பராபரனிடத்தும் யானேறுகின்றேனென்றே
யன்பினுன் சொன்னதாக வவர்கள்பாற் சொல்வாயென்றார்

எ

வேறு.

மற்றமாதர் கல்லறையின் மத்தலாவூராட்டனித்
துற்றிடவே விட்டுச்சீடர்கட் குரைக்கப் போயின
வற்றந்தன்னிலே யியேசவர்களுக் கெதிர்ப்படப்
பெற்றுவாழ்மினென்றனர் பெருங்களிப்போடந்நலார்

அ

நாதர்பாத மேபிடித்து நன்குறப் பணிந்தன
ரோதினு ரஞ்சாதிரென்றியேசு நீங்களோடியென்
சோதரர் கலிலேயா வைத்தோயும் வண்ணமாகவே
யீதினைச் சொலுங்களென்னை யங்குகாண்பரென்றனர்

௯

கல்லறையைக்காவல் செய்யவைத்த காவலாளிக
ளொல்லையிற் சென்றேதவங் கணுற்றயாவு மோர்ந்துதா
மல்லலைக்கொண்டே பிரதானாசாரியர் மூப்பரோ
டெல்லையில் லாலோசனையைச் செய்தேயிந்தக் காவலோர்

௰

கொண்டிடும் பொருள்கொடுத்து நாங்கடூங்கங்கொண்டபோ
தண்டியே யவன்சீடரிராத்திரியிலே யவற்
றண்டலின்றிக் கொண்டுபோனாரென்று சாற்றுமின்றுரைக்
கெண்டினிற் சினம்படாமல் யாங்கள் செய்வமென்றனர்

௰௧

அந்தவா றவர்களுமியம்பினார்க ளையரைச்
சிந்தையாரக்கண்டு சென்றதை யலார்களெங்கணுந்
தந்தமக்குளே யியேசுவை நினைந்து தங்களு
ணைந்திடும் பலர்க்குமே நடந்தசெய்தி கூறினார்

௰௨

கூறுவோர்கள் கூற்றினைப் பிதற்றலாக் குறித்துளத்
தாறுதலு நம்புதலு மற்றவர்களாயினு
ரீறிலா வியேசுதா னெழுந்தநாளிற் பேதுரு
தேறிடும் படிக்குவந்து தரிசனஞ் செய்வித்தனர்.

---

## எம்மவிலிருவர் கண்ட சருக்கம்.

௧

அருமையார் செய்தியை யறையப் போயின
தெரிவையர் சொன்னதைத் தேர்ந்திரண்டுபே
ரொருசலே நகருக் கிரமையின் காவத
மருவு மெம்மவுவென வழங்கு மூவர்வந்தார்

௨

வந்திடு நாளந்த ஞாயிறே மனம்
வெந்துயரா னடந்ததை விளம்பிக்கொள்
சந்தருப்பத்திலே சார்ந்தியேசுவுந்
தொந்தமாய் வந்தனர் சொல்லலுற்றனர்

௩

அவர்களா மிவரைத் தாமறிவுறாவணந்
தவவுங் கண்மறைப்பினைச் சார்ந்திருந்தன
விவர்களைத் துக்கமார் முகமியைந்து நீர்
நவிலுஞ்சொல் லேதென்றா ரியேசுநாயகர்

௪

இருவரிலொருவன் கிலோப்பா வென்பவன்
பிரதியுத்தரமே பேசுகின்றன
னெருசலே மின்று சம்பவித்தயாவு நீ
தெரிகிலாமற் பரதேசியானையோ

என்பதாய்ச் சொற்றன னெதனையென்றனர்
மன்பராபரனுக்கு மனிதர் யாவர்க்கு
முன்பதாய்ச் செய்கையின் மொழியில் வன்மையா
ரன்புறு தீர்க்க தரிசியேயாயின

சா

நாசரேத்தியேசுவை நமது முக்கிய
வாசாரியருந் தலைவருமே யாகநினைப்
பேசிடச் செய்துதான் பெருஞ்சிலுவையில்
வீசியே மரணத்தை விளைத்ததை யென்று

எ

இசிரவேலைத் திருப்பிடத் தக்கோரென்று
விசுவாசிப்பாய் நம்பி விரும்பி நின்றனம்
பிசகிதுமூன்று நாளென்னப் பெற்றது
நசையுறுமெங்களிற் சிலநல்லார்கள் போய்

அ

கல்லறைக்குட் சரீரத்தைக் காண்கிலார்
வல்லவருயிருடன் வாழ்கின்றாரென்று
சொல்லினாராயவான் றூதரையுங்கண்
புல்லிவந் தோமெனப் புகலுகின்றனர்

கூ

அதற்குச் சான்றோர்ச்சிலரங்கணெய்தியே
விதித்தவாறுடலைக் காணுமன்மேலினு
ரிதற்கெலாமியேசையோ காண்கிலோமென்றார்
கதித்தெழுந்தருளிய கர்த்தர் கூறுவரர்

ய

வேறு.

தீர்க்கதரிசிகள் சொன்ன யாவையிலும் விசுவசிப்புச் செய்யாநெஞ்சுங்
கூர்த்தமந்தவிருதயமுங் கொண்டவர்காள் கிறிஸ்திந்தக் கொடும்பா [டெல்லாஞ்
சேர்த்தனுபவிக்கவுந் தம்மகிமைக்குட் சென்றிடவுந் தேவையான
தீர்த்ததன்றோவென்று சொல்லி நின்று மோசேமுன் றீர்க்கதரிசிமாரை

யக

துவக்கியெல்லாவேதவெழுத்துக்களிலுந் தமக்கடுத்த தூய்மை தம்மை
யவர்க்கு விவரித்துக்காட்டினரவர்களெம்மவூரடைந்தாரைய
ரிவர்க்கப்புறம் போவார்போலவே காண்பித்தாரிவர்கண்மாலை
நிவப்புறுஞ் சாய்ங்காலமாயிற்றதனு னீயெங்களுடனிருக்க

யஉ

வேண்டுமென்றே வேண்டிக்கொண்டார் களியேசுமிருந்தார் மேவெல் [லோரு
மூண்டினப்பந்தியிலிருக்கும்போதையா ரப்பமெடுத்தோதிப் பிட்டே
யாண்டவர்கட்குக் கொடுத்தாரன்னூர்கண் டிறக்கப்பட்டவரை யோர்ந்
மீண்டிவர்கள் கண்படாமற் போனாரற்புதத்தை விளைக்கவந்தோர் [தார்

௰௩

ஈங்கிவர்களோ வொருவரோடொருவர் வழியினில் வேதத்தெழுத் [தைப்
பாங்குடன் சொல்லுகையினமதிருதயங்களுருகி வசப்பட்டவன்றோ
வாங்கெனவே சொல்லிக்கொண் டப்போதே யெருசலேமடைந்தாரங்
ஞெங்குபதினொருசீடர்களுமுடனே வசிப்பொரு மொன்றுகூடி.

௰௪

கத்தர் மெய்யாயெழுந்து சீமோனுக்குத்தான் றரிசனங்காட்டினரென் [றோதி
யொத்திருக்கக்கண்டிவர்களும் வழியிற் சம்பவித்த வுரைத்தும்பின்பப்
பத்தைப் பிட்கையிற்றங்களுக்கறியப் பட்டனரென்பதைப் பகர்ந்தார்
சத்திய நாயகரை நினைந்தவர்களெலா மெய்யன்பு சார்ந்திருந்தார்

---

## சீடர்களுந் தோமாவுங் கண்ட சருக்கம்.

க

அத்தின ஞாயிறத்தமன வேளையிற்
கத்தர்தஞ் சீடர் கூடிய களத்திலே
மெத்தவும் யூதர்க்கு வெருவி வாரியைப்
பொத்தியே பூட்டியுள்ளிருக்கும் போதினில்

உ

பந்திசேர்ந்திருக்கின்ற பதினொருவர்க்குந்
தந்தையியேசுவுந் தமை வெளிச்செய்தே
யந்தச்சீடரி னடுவமர்ந்தவருட
னுந்தமக்குச் சமாதனமென்றோதினர்

௩

மானவர்திகிற் பயமனியோராவியைக்
காணுவதாய் நினைந்தனரக் காலையிற்
கோணியே கலக்கங் கொள்கின்றனிரென்றோ
பூணுவதேனையம் புந்தியிலென்று

௪

நானேதானென்றன் கைகால் கணுடமி
னேனெனிலெனக்கென்பு மூனுமுண்டென்றும்
மானறிவதுபோலோ ராவிக்கில்லையே
தானேயென்கின்றதைச் சொல்லித் தன்கையும்

௫

கால்களையும் மவர்களுக்குக் காண்பித்தா
ரேலவேயவர்கள் சந்தோடத்தாலின்னஞ்
சீலரைவிசுவசியாமற் சிந்தையின்
பாலதாயதிசயப்படுமப் போதையர்

௬

அருந்தவே தேனுமுண்டோ வென்றானன்னார்
பொரிந்திடச் செய்தலூண் பொதிந்தபெதெனிறு
விருந்துணகவொடுத்தன ரேற்றிவர் முனம்
பெருந்தகையேசுவும் பொசித்துப் பின்புதான்

௭

உங்களுக்குச் சமாதானமோர்பிதா
விங்கெனை யனுப்பியதென்னையானும்மை
யெங்கணுமனுப்புவே னென்றவர்கள்மேற்
பங்கினூதிப் பரிசுத்தவாவியை

௮

வாங்குமினெவர்பவமனிக்கின்றீர்களோ
வாங்கவர் பாவமன்னிப்புக்கானதா
நீங்களார்க்குப்பவச்சுமை நிறுத்துவீர்
தீங்கதுவவர்கண்மேற்றிரமே யென்றனர்

௯

வேறு.

பன்னிருவரிற்றிதிமுவெனப் பட்டதோமா
தன்னைத்தானிகரேசுதான் சார்ந்துற்றபோது
மன்னுமற்றச் சீடர்களுடனிருந்திலன் வந்தா
னன்னவனொடு மற்றவர் கர்த்தரிங்கடைந்தார்

௰

காணப்பெற்றனமெனவவனோவவர்கையி
லாணியினச்சைக் கண்டுதிலென் விரலிட்டேன்
பாணியை விலாவினிலிட்டுப் பார்த்திடாமலே நான்
பூணுவேனலேன்விசுவசிப்பெனப் புகன்றனனே

௰௧

எட்டு நாளைக்குப்பின் பந்தச் சீடருமிவரோ
டொட்டியேயத் தோமாவு முள்ளிருந்தனர் கதவு
கெட்டியாகப் பூட்டிட்டிருக்கையிற் கிளர்நடுவுட்
பட்டுங்களுக்குச் சமாதனமெனவையர் பகர்ந்தார்

௰௨

பகர்ந்தபின்பு தோமாவுட னென்றன் பாணியையுன்
றகுந்தவங் குலியாற்றுமாய் விலாவினைத்தடவி
யகந்தனுலறிந்ததன்பினா விசுவசிப்படைந்தே
யுகந்திடென்றனருளத்தினினைந் துரைத்தவையை

௰௩

அறிந்துதோமா யென்னாண்டவரோ யென்னாண்டவரே
நிறைந்தவென்பராபரனே யென்றனின்ற குருவு
மிறந்தவென்னைக்கண்டே விசுவசித்தையெற்காணுத்
திறந்தனில் விசுவசிப்பர் பாக்கியரென்றார் தெளிய

# திபேரியாக் கடற்கரையிற் கண்ட சருக்கம்.

௧

சீலராமியேசுவைக்குப்பின் றிபேரியாக்கடலின்
கூலமீதினிற் சீடர்ககுக்தங் குறிப்புணர்த்தி
பேலச்செய்தனரெற்றெனிற் சீமோன் பேதுருவும்
மேலுந் தீதிமுவென்னவே விளம்பு தோமாவும

௨

கலிலெயாதெயக் கானாவூர் நாத்தான வேலு
நலசெபெதேயுவின் குமாரர்களு நற்சீடர்
பலருளேயிருவருமொருமித் துறப்பட்டா
ரலைகடலிற்சீமோன் பேதுரடைந்து மீன்பிடிப்பான்

௩

அடையும்போதினிலவனுடனவருமடைந்தார்
படகிலேறினரன் றிராத்திரி வலைப்பரப்பிற்
றொடர்படைய வொன்றும் பிடித்திலரிருடொலைந்த
விடியற்காலையிலேசுவோ கரையின்மேனின்றார்

௪

அவர்களோவியே சென்றறிகிலரையாரவர்பா
ணவில்வர்மைந்தர்காள் பொசிக்கற்கேதேனுநண்ணியதா
நுவலுமென்றனரில்லையென்றார் கணும்படகிற்
கிவண்வலப்புறம்வலையிடுமகப்படுமென்றார்

௫

ஐயர்சொற்றவாறே செய்தாரளவின் மீன்வலையாம்
பையுட்பட்டனவிழுக்கமாட்டார் பரதபித்தார்
மெய்யர் நேசித்த சீடனே பேதுரைவிளித்து
துய்யராமவர் கர்த்தரென்றான் சொலக்கேட்ட

௬

போதுதா னிருவாணிதற் சட்டையாற் போர்த்தே
யோதத்திற் குதித்தான்மற் றோரிருநூறு
மீழிசேர் முழங்கரைக்கப்பான் மேவினார்மீனை
யாதரத்துடனிழுத்துத் தாம்படகுடனடைந்தார்

௭

கரையில் வந்தவர்கண்டனர் கரிநெருப்பினையு
மெரியின்மீதின் மீனிருப்பதை யப்பத்தையெல்லாங்
குருவியேசுவுமவரைநீர் கொணர்ந்தமீன்சிலதைத்
தருதிரென்றனர் சீமோன்பேதுருவங்ஙன் சார்ந்து

௮

நூற்றைம் பத்து மூன்றுப்பெரு மீனுழைங்கிருந்து
மூற்றமற்றவவ்வலைகரையுற விழுத்திட்டான்
போற்றியேசுவர்களைவந்து பொசிமினென்றுரைத்தார்
தேற்றமுற்றனரேசுதானென மனத்தெளிவாய்

௬௰௯

தெரிந்ததாலேநீராரென வினாசெயத்துணியா
ரிருந்தகாலையிலையருமப்பத்தை யெடுத்தே
யருந்திடும் படிக்கவர்களுக் களித்தனாதுபோற்
பொரித்தமீனையுங்கொடுத்தனர் பொசித்தனர் சீடர்

௭௰

வேறு

பேதுருவையேசுகுரு யோனாவின் பிள்ளையாகிய சீமோனே
நீதிரளாமிவர்களினுமிகவுமென்னை நேசிக்கின்றாயோவென்று
ராதரவொடவனு மாண்டவரே நானுமமைபன்புசெய்கின்றேனென்
றீதை நீரறிவீரென்றானவரென் னாட்டுக்குட்டிகண் மேயென்றார்

௭௰௧

மற்றுமோர் தரமையர் யோனாவின் மகனாஞ் சீமோனே யென்னைப்
பற்றிநேசிக்கின்றாயோ வென்றே பகரவாண்டவரே யும்மைச்
சற்றும் விடாமற் சிநேகிக்கின்றேனென்பதைத் தானறிவீரென்று
சொற்றனனையருமவனை யென்னாட்டுக் குட்டிகளைத்துனிமேயென்றார்

௭௰௨

பின்னருமோர்தரம் யோனாவின் பிள்ளையாய சீமோனே நீதா
னென்னைச் சிநேகிக்கின்றாயோவென்றார் மூன்றாந்தரத்திலிச்சொற்
சொன்னதனாற் பேதுரு துக்கப்பட் டாண்டவரே நீர் தோன்றனைத்து
நன்னயமாயறிந்திருக்கின்றீரும்மை நானேசிக்கின்றேனிதை

௭௰௩

நீரறிவீரென்றானியேசவனை யென்னாடுகளை நீமேய் மெய்
யாரச்சொல்கின்றேனீ யிளவயதாயிருக்கையிலுன்னரையை நீயே
தீரனாய்க் கட்டிக்கொண்டே வேண்டுமிடந்திரிந்தாய் முதுமைப்போதிற்
சோர்வுடன் கைநீட்டுவாய் வேறொருவனின்னரையைச் சுற்றிக்கட்டி

௭௰௪

வேண்டாத விடத்துன்னைக் கொண்டுபோவானென்றார் விரிவிவற்றை
மாண்டிடுமிம் மரணத்தாற் பராபரனை மகிமைசெய்வானெனக்குறிப்பா
யாண்டவர் சொன்னாரிந்தப்படிச் சொல்லியவனை யென்னைப்பின்செல்
[லென்று
ரீண்டுமரித்தோரிலிருந் தெழுந்தவரைச் சீடர் நேசித்திருந்தார்

---

## பரமண்டலமேறிய சருக்கம்.

௧

கலிலெயாதனிலே சீடர் சணம் பதினொருவருந்தங்
தலைவராமியேசு தங்கட்குணர்த்திய சைலத்திற்கட்
புலனுறவவரைக்கண்டு புகழ்ந்தடிபணிந்துக் கொண்டார்
சிலர்கள் சந்தேகப்பட்டார் செல்லந்தச்சமயந் தன்னில்

௨

ஐந்நூறுபேராஞ் சோதரர்க் கொருமிக்கவையர்
முன்னர் நின்றருளிக்காணச் செய்தனர் மொழிந்தாரப்போ
தென்னெனிலவர்களைப் பார்த்தெனக்கு வானத்திற் பூவிற்
பன்னதிகாரமெல்லாங் கொடுக்கப்பட்டிருப்பதாலே

௩

நீங்கள்போய்ச் சகலசாதிகளை நேடிச்சீடராக்கும்
பாங்குறப் பிதா குமாரன் பரிசுத்தவாவி நாமத்
தோங்கவர்கட்கு ஞானஸ்நானமீய்ந் துங்கட்கென்று
லீங்குகற்பித்தவெல்லாங் கைக்கொள்ளவியம்பி வைம்மின்

௪

விசுவாசமுள்ளோனும் ஞானஸ்நானமேவப் பெற்றோன்
மிசையிரட்சிக்கப்பட்டு மேவுவான் விசுவாசந்தா
னிசையிலானாக்கினைக்குட் டீர்த்திடப்படுவானென்றும்
வசித்தல் செய்கின்றேனும்பால் வையக முடிவுமட்டும்

௫

எனப்புகன்றியேசு தம்மைத் தஞ்சீடரெல்லாருக்குங்
கனப்படுமடையாளங்க ளுயிருடனிருத்தல் காட்டி
மனத்தெளிவடையவே நாற்பது நாட்கண்மட்டுமொவ்வோர்
தினத்தினுந்தரிசிப்பித்துத் தேவன்றன்னிராச்சியத்தை

௬

அடுத்தயாவையும் புகன்றாரவர்களை யெருசலேமின்
மடுத்திடக் கூட்டியார்க்கும் வசனித்ததென்னை யென்னில்
விடுத்துப்போகாதீரிந்த வெருசலேந்தனைமேவெற்குக்
கொடுத்தவென்பிதா வாக்குக்குக் காத்துக் கொண்டிருமே
[னென்னில்

௭

யோவான் ஞானஸ்நானந்தண்ணீரினாலுதவினான்மெய்
யாவியால்ஞானஸ்நானம் பணைப்படுவீர்களஃது
போவுறும்பன்னாட்குப் பிற்பாடன்றே யெனப்புகன்றா
ரார்வலாய்க்கூடினோர்களவரை யாண்டவரேயிந்த

௮

காலத்திலிசரவேலினி ராசாங்கஞ் சீராகக்கண்
டேலவைப்பீரோ வென்றாரிவர்களுக்கவர் பிதாச்செங்
கோலில் வைத்திருக்குங் காலமாயினுங் கொள்ளும்வேளைப்
பாலதாயினுநும்மாலோர்ந்திடப்படும் பான்மைத்தன்றே

௯

உங்கண்மேற் சுத்தவாவி யுறவரும்போது நீங்கள்
பொங்கும் வன்மையையடைந்தே போயெருசலேம் யூதேயா
பங்கு செய்சமாரியா தேயங்களெங்கும் பார்முற்று
மெங்கணுமெனக்குச் சாட்சியாயிருப்பீர்களென்றார்

௰

என்றிவர்களைப் பெத்தானியாவென்னுமூர் மட்டெய்தத்
துன்றியே யழைத்துக்கொண்டு போகித்தங் கைகடூக்கி
நின்றவர்களையாசீர்வாதஞ் செய்தார் நிகழப்போதே
யொன்றியதென்னோ வெண்ணிலுடனிற் போர்களைப் பிரிந்தே

௰க

பரமண்டலத்திலே யேற்றெடுத்துக்கொளப் பட்டாரே
யொருமேகமிவர்கள் கண்கட்கொளிவுற வெடுத்ததிந்தத்
தரணியோர் பாவந்தீர்த்துத் தாமருளுங் கிறிஸ்து
மருவியே பராபரன்றன்வலது பாரிசத்திருந்தார்

௰உ

வேறு.

ஐயர்தாம்போகும் போதவரெல்லாம் வானத்தை யணுந்துட
தெய்வதூதர்கள் வெண்ணுடையினரிருவர் திடீரென வந்

வையகக்கலிலேயா மனிதரே நீர் வானத்தைப் பார்த்து
மெய்யவுங்களைத்தாம்விட்டுவானத்துக் கேற்றிடமேவி

௰ஙு

ஏசுவைவானத்துக் கெந்தப்படியா மீயகக் கண்டீ
ரேசுடனந்தபடியவர் வருவாரென்றனர் சீடர்கள
யாசையாய்ப் பணிந்தானந்தத்தோ டொலிவமலையகனம
நேசமாய்த் தேவாலயத்திலே பிதாவைப்புகழ்ந்து தோ



உ

ஐந்நூறுபேராஞ் சோதரர்க் கொருமிக்கவையர்
முன்னர் நின்றருளிக்காணச் செய்தனர் மொழிந்தாரப்போ
தென்னெனிலவர்களைப் பார்த்தெனக்கு வானத்திற் பூவிற்
பன்னதிகாரமெல்லாங் கொடுக்கப்பட்டிருப்பதாலே

௩

நீங்கள்போய்ச் சகலசாதிகளை நேடிச்சீடராக்கும்
பாங்குறப் பிதா குமாரன் பரிசுத்தவாவி நாமத்
தோங்கவர்கட்கு ஞானஸ்நானமீய்ந் துங்கட்கென்று
லீங்குகற்பித்தவெல்லாங் கைக்கொள்ளவியம்பி வைம்மின்

௪

விசுவாசமுள்ளோனாய் ஞானஸ்நானமேவப் பெற்றோன்
மிசையிரட்சிக்கப்பட்டு மேவுவான் விசுவாசங்கா
ணிசையிலானாக்கினைக்குட் டீர்த்திடப்படுவானென்றும்
வசிதல் செய்கின்றேனும்பால் வையக முடிவுமட்டும்

௫

எனப்புகன்றியேசு தம்மைத் தஞ்சீடரெல்லாருக்குங்
கனப்படுமடையாளங்க ளுயிருடனிருத்தல் காட்டி
மனத்தெளிவடையவே நாற்பது நாட்கண்மட்டுமொவ்வோர்
தினத்தினுந்தரிசிப்பித்துத் தேவன்றன்னிராச்சியத்தை

௬

அடுத்தபாவையும் புகன்றாரவர்களை யெருசலேமின்
மடுத்திடக் கூட்டியார்க்கும் வசனித்ததென்னோ வென்னில்
விடுத்துப்போகாதீரிந்த வெருசலேந்தனைமேவெற்குக்
கொடுத்தவென்பிதா வாக்குக்கு க்காத்துக் கொண்டிருமே
[னென்னில்

௭

யோவான் ஞானஸ்நானந்தண்ணீரினாலுதவினான்மெய்
யாவியால்ஞானஸ்நானம் பணப்படுவீர்களஃது
போவுறும்பன்னாட்குப் பிற்பாடன்றே யெனப்புகன்றா
ர்வலாய்க்கூடினோர்களவரை யாண்டவரேயிந்த

௮

காலத்திலிசரவேலினி ராசாங்கஞ் சீராகக்கண்
டேலவைப்பீரோ வென்றாரிவர்களுக்கவர் பிதாச்செங்
கோலில் வைத்திருக்குங் காலமாயினுங் கொள்ளும்வேளைப்
பாலதாயினுநம்மாலோர்ந்திடப்படும் பான்மைத்தன்றே

௯

உங்கண்மேற் சுத்தவாவி யுறவரும்போது நீங்கள்
பொங்கும் வன்மையையடைந்தே போயெருசலேம் யூதேயா
பங்கு செய்சமாரியா தேயங்களெங்கும் பார்முற்றா
மெங்கணுமெனக்குச் சாட்சியாயிருப்பீர்களென்றார்

௰

என்றிவர்களைப் பெத்தானியாவென்னுமூர் மட்டெய்தத்
துன்றியே யழைத்துக்கொண்டு போகித்தங் கைகடூக்கி
நின்றவர்களையாசீர்வாதஞ் செய்தார் நிகழப்போதே
யொன்றியதென்றே வென்னிலுடனிற் போர்களைப் பிரிந்தே

௰௧

பரமண்டலத்திலே யேற்றெடுத்துக்கொளப் பட்டாரே
யொருமேகமிவர்கள் கண்கட்கொளிவுற வெடுத்ததிந்தத்
தரணியோர் பாவந்தீர்த்துத் தாமருளுங் கிறிஸ்து
மருவியே பராபரன்றன்வலது பாரிசத்திருந்தார்

௰௨

வேறு.

ஐயர்தாம்போகும் போதவரெல்லாம் வானத்தை யணுந்துட
தெய்வதூதர்கள் வெண்ணுடையினரிருவர் திடீரென வந்

வையகக்கலிலேயா மனிதரே நீர் வானத்தைப் பார்த்து
மெய்யவுங்களைத்தாம்விட்டுவானத்துக் கேற்றிடமேவி

௰௩

ரசுவைவானத்துக் கெந்தப்படியா மேகக் கண்ட
றேசுடனந்தபடியவர் வருவாரென்றனர் சீடர்கள
ாசையாய்ப் பணிந்தானந்தத்தோ டொலிவமலையகனம
நேசமாய்த் தேவாலயத்திலே பிதாவைப்புகழ்ந்து தோ

ருமபி
லந்தி
நதுநின்றி
[ருந்தார்